

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருப் பேரூர்.

ஐங்கரர் துதி.

கங்கையும் பனிவெண் டிங்களும் விரைத்த
கடுக்கையந் தொங்கலு மரவும்
தங்குபொற் சடையு முக்கணுந் தாதை
தானுவென் றுணர்த்தமென் மலர்க்கை
அங்குச பாச மணிந்துவெற் புயிர்த்த
வாரணங் கன்னையென் றுணர்த்தி
வெங்கலி முழுதுந் துமித்தருள் பட்டி
விநாயகன் சேவடி பணிவாம்.

பேரூர்ப்புராணம்



ஸ்ரீ பட்டீசுவரர் கோவில், பேரூர்.

## முன்னுரை.



த்மாக்களுக்கு உறுதியைத்தருவன புகழும், புண்யமும் ஞானமும் ஆம். இவை மூன்றும் பயன்படுதல் இம்மையினும் மறுமையினும் வீட்டினும் ஆம். எனவே, இம்மையில் அனுபவிக்கப்படுவது புகழ் ஒன்றே எனவும், அப்புகழுக்கு ஹேதுவாகிய செல்வப்பெருக்கம் மறுமைக்குச் செல்லாதெனவும், அதற்கு வேண்டுவது புண்யம் ஒன்றே எனவும், அப்புண்யச்சிறப்பு வீட்டுநெறிக்கு அமையாதெனவும், அங்ஙனம் வேண்டுவது ஞானம் ஒன்றே எனவும் ஆம். அப்புகழும் புண்யமும் ஞானமும் ஆத்மாக்கள் உரிமையாக அடையக்கூடாதாகலால், அவற்றைக்கூட்டுவது அநந்தகல்யாண குணநிதியாய் விளக்கும் ஸர்வஉரிமையாளனுகிய இறைவனுகும். 'அவ்விறைவனே விறகில் தீ போலவும், பாலில் நெய்போலவும், பழத்தில் சுவைபோலவும், எள்ளினுள் எண்ணெய் போலவும் எங்குமுளான்' என்று கூறியவாறு உள்ளவன். அங்ஙனம் ஸர்வவியாபியாயுள்ளவனுயினும் தாதமார்க்கம், புத்திரமார்க்கம், ஸகாமார்க்கம், ஸன்மார்க்கம் என்கின்ற சரியை கிரியை யோக ஞானங்களினின்றும் வழிபடுவோர்க்கு,

"உருக்காண வொண்ணுத பான்முலைப் பால்விம்மி
யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவ னன்பர்க்கே"

(சித்தியார்)



ஸ்ரீ மரகதவல்லி அம்மன் கோயில் விமானம், பேரூர்.

என்னும் உண்மையால் அருள்செய்வான் என்பதே மெய். இதனால் பசுவினது தேகம் முழுதும் பாவியிருப்பது பாலெனவும், அப்பாலானது தன்னை நினைத்துக்கூவும் கன்றைத் தானும் நினைந்துருகி முலைக்காம்பின்வழியே கன்றுக்கு ஊட்டுவதுபோல் இறைவன் எங்கும் நிறைந்துள்ளானாயினும், தன்னை அன்போடு பாவிப்பணிந்து தொழுவார்க்குச் சிவ லிங்க வடிவினின்றும் வெளிப்பட்டு வேண்டியவாறு அருள்புரிவான் என்பது பெறப்பட்டது. இதற்குச் சான்று சைவசித்தாந்த சமயாசார்யர்களே.

எங்ஙனம் எனெனில், பசுவை நினைத்து மனமுருகிக்கதறும் கன்றைப்போலும், தேவார திருவாசகங்களால் சிவபெருமானை அன்புறு மனத்தால் குழைந்தழைக்க, அப்பரிவுறமொழிகேட்ட பரமன், ஒரு சிறிதுந் தாழ்க்காது அக்கணமே வேண்டியாங்கு வெளிப் பட்டருளியதேயாம். அவ்வாறு அன்புற்றருளியது ஆங்காங்கு அன்பர் தம்பொருட்டுக் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கும் திருத்தலங்கள்தோறும் ஆம். அத் திருப்பதிகள் பலகோடி. அவற்றுள் ஆயிரத்தெட்டுஸ்தலங்கள் முக்யமானவை எனப் புராணங்கள் கூறுகின்றன. அத்தலங்களுக்குரிய மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் பெருமை அமைந்துகிடப்பினும் அவற்றைப் புராணவாயிலாகத் தெரிந்துகொள்ளுதற்கு அநேகம் மறைந்துகிடக்கின்றன. அவ்வாறே புராணப் பிரசித்தமான தலங்களுக்கெல்லாம் தேவாரப்பதிகங்கள் இருந்தும் முற்றுங் காண்பதற்குக்கூடவில்லை. இப்பொழுது 274 தலங்களுக்கே தேவாரப்பதிகங்கள் வெளிப்பட்டிருக்கின்றன. அத்தலங்களின் மான்மியம் சிலருக்கேயன்றிப் பலருக்குந் தெரியாதிருக்கின்றன. அத்தலங்களுள், கொங்குநாட்டில் கோயமுத்தூருக்கு அருகில் காஞ்சிவாய்ப் பேரூரும் ஒன்று. இத்திருத்தலம், 'பிறவா

நெறி' எனவும், 'மேலைச்சிதம்பரம்' எனவும் பெயர் சிறந்தது. இப்பிறவாநெறித் தலத்தின் வரலாறும், மூர்த்தி தீர்த்தங்களின் பெருமையும், மற்றுஞ் சிறப்புக்களும் சிவதலயாத்திரை செய்வாரும், பிறரும் செவ்விதின் உணர்ந்து மகிழும்பொருட்டுத் தெளிவாகப் போதிய ஆதாரங்களுடன் இதன் கீழ் சுருக்கிக் கூறுகின்றோம்.

## திருப்பேரூர்.

பேரூர் எனப்படும் மேலைச்சிதம்பரம், கோயமுத்தூருக்கு மேற்கு மூன்றுமைல் தூரத்திலுள்ள விசேஷ சிவதலம். இத்தலத்தில் ஸ்ரீ நடராஜர் ஆலயம் மேலான சிறப்புடையது பற்றியும், தென்னிந்தியாவின் மேற்றுத்திசைக்கு இதுவே முதன்மையானது பற்றியும இதற்கு மேலைச் சிதம்பரம் எனப் பெயர் சிறப்பதாயிற்று. தற்காலம் மிகப் பிரசித்திபெற்று விளங்கும் கோயமுத்தூர், பூர்வம் பெரும்பாகம் கொங்குநாட்டைச் சார்ந்ததாயிருந்த காரணததால், அதிலுள்ள இத்தலம் கொங்குஸ்தலங்களுள் ஒன்றாகச் சேர்க்கப்பட்டது. பூர்வம் எல்லாம் வல்ல இறைவர், இங்கு நடராஜமூர்த்தமாய் எழுந்தருளித் தாண்டவம் செய்ததாக ஸ்தலபுராணம் கூறுகின்றது. இப்பேரூர்க்கு மேற்கு 12 மைல் தூரத்துள்ள வெள்ளிமலை, இறைவர்க்கு உகந்த ஏகாந்தஸ்தானமாக விளங்குகிறது. கங்காநதியே இவ்வெள்ளிமலையில் காஞ்சிமாநதியாய்ப் பெருகி அதனுள் மூழ்குவோரைப் புனிதமாக்குகின்றது. பேரூர் பிறவாநெறித்தலம் என்பதற்குச் சான்றாக "பிறவாப்புளி" "இறவாப்பனை" என்ற இரண்டு விருக்ஷங்கள் என்றும் அழியாமல் நிலைபெற்றுக் காட்சிப்பிரமாணமாய் விளங்குகின்றன. இதற்குப் பத்திபுரி, பரம்புரம், ககனபுரி, போதபுரம், நாட்டியபுரம், ஆதிபுரி, வன்மீகநகரம், மேருநகரம், ஞானபுரம், பிரமநகரம், குருக்ஷேத்திரம், பசுபதிபுரம், இரஜதசபை, குந்தகானம், சிற்சபை, கலியாணபுரம், போதிக்கானம், தேனுபுரம், பிறவாநெறி, தவசித்திபுரம், எனப் பலபெயர்கள் வழங்கப்படுகின்றன.



பிக்ஷாடனர், பேரூர்.

———



பேரூர் கோயில் முன்வாயில் கோபுரம்.

## கொங்குநாடும்—பூர்வீக வரலாறும்.

"மலாடும் வளர்பாண்டியும் வழிந்துபுனனுடு
நிலாவுதிறையாக நிதி நிச்சமும் வழங்கி
விலாழிமத குஞ்சரமும் வெய்ய பொருள்மற்றுங்
துலாவுசிறப் பெய்தியது கொங்குவளநாடு"

(பேரூர்ப்புராணம்)

கொங்குநாடு அல்லது அம்மண்டலத்தின் வரலாற்றைத் தெளிவுபெற விளக்குவதற்குப் போதிய ஆதாரங்கள் இதுவரை கிடைத்தில. இந்நாட்டின் எல்லை நிலையைப் பற்றி அறிஞர்களுக்குள் அபிப்பிராயபேதம் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. இங்ஙனம் அபிப்பிராயபேதம் நிகழ்வதற்கு இந்நாடு அடிக்கடி அரசுமாற்றத்தாலும், படையெழுச்சியாலும், போர்க்கொடுமையாலும் பலவாறு சிதைவுற்று ஓர் அரசின்கீழ்த் திறமாக நிலைபெறுதலின்றியிருந்து வந்ததே காரணமெனக் கூறுதல் பொருந்தும். இக்காரணத்தாலேயே இதன் அரசபரம்பரையும், அவர்கள் பராக்கிரமமும், கீர்த்தியும், பெருமையும், கல்வெட்டு முதலியனவும் பிறர் கண்டுணராவகை அந்தகாரப்பட்டுள்ளன. இந்நிலையிலுள்ள நாம் இந்நாட்டினைப்பற்றி விளக்கமாகக்கூறுதல் எங்ஙனம் முடியும்? எனினும், நாளடைவில் இந்நாடுபற்றி ஆராய்ச்சியாளரும், வரலாற்று ஆசிரியர்களும், புலமைப்பெரியாரும், தாந்தாம் ஆராய்ந்துகண்ட உண்மைகளை, வரலாறாகவும், நூல்முறையாகவும், குறிப்புரைகளாகவும் எழுதிவைத்துள்ளதை ஆதாரமாகக்கொண்டு, 'கொங்குநாடும் பூர்வீக வரலாறும்' என்ற விஷயத்தை ஒருவாறு தொகுத்துக் கூறுகின்றோம். அவை வருமாறு:—

பூர்வம் 'கோங்கன்' என்னும் பெயர் புனைந்த சோனல் அரசுபுரிந்தகாரணத்தால் 'கோங்குநாடு' எனவும், அதுவே 'கோங்கு' என்றும் வழங்கப்பட்டதென்று அறியப்படுகிறது. இதனைத் திருவாவடுதுறை ஆதீனத்துத் தமிழ்ப் பெரும்புலவராகிய 'கச்சியப்ப முனிவர்' தாம்பாடிய பேரூர்ப்புராணம் நாட்டுப்படலம் 2-வது செய்யுளில்,

"கோதைபயில் விற்கொடி குலாவிய புயத்தன்
கோதையர் விழிக்கருணை குளிக்கு மருமத்தன்
கோதைக மழுங்கவிகைக் கொங்கனென வின்ளுங்
கோதைகனி யாண்டதொரு கோங்கு வளநாடு"



பேரூர் கோயில் கெர்ப்பகிரஹத்தின் விமானம்.

எனக்கூறுவதால் தெளியப்படும். 'கொங்கனென வின்ளுங் கோதை' என்பது, கொங்கன் என்று வழங்கப்படும் சோன் என்று தெளிக. இங்ஙனம் அன்றி, வேங்கடங்குமரி என்னும் இவற்றுக்கிடையே உள்ள நிலமெல்லாம் செந்தமிழ் ஒன்றும், கொடுந்தமிழ் பன்னிரண்டுமாகப்பிரிக்கப்பட்டிருக்கவும் அவற்றின் வேறாக ஒரு தமிழ்நாடு தனியே ஆங்குண்டென்று நினைப்பதற்கே இடமில்லை. இக்கொங்கு பண்டுதொட்டே பெருநிலைபெற்றதாயிருப்



சாந்தலிங்க ஸ்வாமிகள் கோயில், பேரூர்.

பின், இது பழைய நாடுகளுடன் சேர்த்து எண்ணப்பட்டதாய் இருக்கும். அங்ஙனம் இல்லாததால், இது நாளடைவில் தன் பெயர்கொண்டு பெருகியதென்பது உறுதிப்படுகின்றது.

இனி அக்கொங்கன் வந்து அரசுபுரிதற்குமுன்னே அந்நாடு இன்னபெயருடையதாய் இருந்ததென்று விளங்காமையால், அது முன்பு காடாய் இருந்திருக்கலாமென்றும் அதனை முதன்முதல் நாடாக்கி ஆண்டவன், கொங்கன் என்னும் இயற்பெயருடைய ஒரு சேரன் என்றும், அந்நாட்டிற்குப் பெயரிடவேண்டியதருணம் நேர்ந்தபொழுது, அக்கொங்கன் பெயரால் கொங்குநாடு எனப் பெயரிடப்பட்டு அப்பெயராலேயே வழங்கப்பட்டது என்றும் சிலர் கூறுகின்றனர். அங்ஙனம் கொங்கனுக்கு முன்னரே சேர பரம்பரை இருந்ததென்றும், அப்பரம்பரையின் சேரர்கள், ஆண்டுவந்தநாடு, கொங்குநாட்டின் வேறாயிருக்கவேண்டுமென்றும், அந்நாட்டை ஆண்டவர் சேரர் ஆதலின், அது இன்னும் சேரநாடு என்னும் ஒரு பகுதியையுடைய மலைநாடாமென்றும் அறியப்படுவதால், கொங்கு வேறு, குடபுலமாகிய பழைய சேரநாடுவேறு என்பது பெறப்படுகின்றது.



பிக்ஷாடனர் சிலை, பேரூர். இது ஒரே கல்லில் அமைக்கப்பட்டு, மிகவும் அத்புதமான வேலைப் பாடுடன் கூடியது கவனிக்கத்தக்கது.

நாட்டின் பிரிவுகள்.

இங்ஙனமன்றிப் பழைய சேரர் ஆண்டுவந்த நாட்டினையே கொங்கன் என்னும் சேரவேந்தன் சிறப்பாய் ஆண்டதுபற்றி அப்பெயர் வந்ததெனக் கூறுவாரும் உளர். அது பொருந்தாது. இந்நாடு பண்டு பொதுவாகச் சேரமண்டலமென்று பெயர் பெற்றிருந்தது. அதில் ஒருபகுதி கொங்கனுக்கு உரித்தானதுபற்றிக் கொங்குநாடு தனிநாடாய் அகநாடாயிருந்தசெய்தி நன்கு அறியப்படுகிறது. இக்கொங்குநாடுபூர்வந்தொட்டுப் பெருகியநிலையில் இல்லாமல், நாளடைவில் ஆட்சியின் திறமையினாலும், மற்றும்பல காரணங்களாலும பெருகியதால், தொண்டைநாடுபோல இக்கொங்குநாடும் ஒரு தனிமண்டலம் ஆயிற்று. மண்டலம் என்றால் ஒரு வட்டம் அல்லது ஒரு பகுதி என்ப. இப்பகுதி ஐந்து பெரும்பிரிவாகத் தமிழகத்து அரசர்களாகிய சேர சோழ பாண்டியர்களால் பிரிக்கப்பட்டபோது, இப்பிரிவுகட்கு முறையே 'சேரமண்டலம்', 'சோழமண்டலம்', 'பாண்டியமண்டலம்', 'தொண்டைமண்டலம்', 'கொங்குமண்டலம்' எனப் பெயர்கள் சூட்டப் பெற்றன. நச்சினார்க்கினியர் தொல்காப்பியச் செய்யுளியலில்,

" நறவேந்து நங்கை நலங்கவர்ந்து நல்கா
மறவேந்தன் வஞ்சியா னல்லன்—துறையின்
விலங்காமை நின்ற வியன்றமிழ்நா டைந்தின்
குலங்காவல் கொண்டொழுகுங் கோ "

என்னும் வெண்பாவில் "வியன்றமிழ் நாடைந்து" என்று கூறுவதால் இதன் உண்மையுணரப்படும்.

பழைமையும்—பண்பும்.

வரலாற்று ஆராய்ச்சி எட்டியமட்டில் மிகப் பழைமையுடையதாகக் கருதப்படும் இராமாயணகாலத்திலேயே இத்தமிழ்நாட்டுள் சேர சோழ பாண்டிய மண்டலங்கள் தனித்தனி உரிமைபெற்ற நாடுகளாயிருந்தனவென்றும், அவைகளில் பாண்டியமண்டலம் இராஜதானி நகரம் தாமிரபருணி யாற்றுக்குத்தெற்கே 'கவாடபுரம்' இருந்ததாகக் கூறப்பட்டமையால், 'தென்புலம்' என்று கூறப்பட்ட பாண்டியமண்டலம் தென்கடல் அறுதி

யாக இருந்ததென்று வெளியாகிறது. இதுபோலவே, 'குணபுலம்' என்றுசொல்லப்பட்ட சோழமண்டலம் கீழ்க் கடல் அருதியாகவும், 'குடபுலம்' என்று சொல்லப்பட்ட சேரமண்டலம், மேல்கடல் அருதியாகவும் இருந்தனவென்ப தையும், அவற்றுக்கிடையே மலைத்தொடரும், அடவிகளும், ஆகிய நிலப்பரப்பே மிக்கிருந்தன வென்பதையும், எழுபத் திரண்டுவெள்ள வானரப்படைகளுடன் இராமபிரான் கிஷ் கிந்தையினின்றும் பிரயாணமாய்த் தமிழ்மண்டலத்துள் சே ர்ந்து, காடுகளினிடையே சென்று, சேதுவழியில் இலங்கை சென்று மீண்டதால் அறியலாம்.


பதஞ்சலி மஹாமுனி.

இதற்குச் சான்று, கொங்கிற் கருவூர்க்குக் 'கரபுரம்' என்னும் பெயர்இருப்பதுபோல், உறையூர்ப்பக்கம் திரிசிரன் என்னும் அரக்கன் இருந்த இடம் ஆதல்பற்றித் "திரிசிராப் பள்ளி" ஆனது போல, 'கரன்' என்னும் அரக்கன் இருந்த இடம்பற்றிக் கரபுரம் என்னும் பெயர் வந்ததுபோலும் எனக் கருதுவதினுல் அறியலாம். ஆதலால், கரபுரப் பக்கமாகிய கொங்குநாடும், உறையூர்ப்பக்கமாகிய சோழநாட்டுப்பகுதி யும், அக்காலத்து இராக்கதர்வஸித்த காடாயிருந்ததென்பது நன்கு தெளிவாகின்றது.

இன்னும் தொல்காப்பியப் பாயிரவுரையில், "அதங்கோட்டாசாற் கிறபத்தெரிந்து" என்று அதன் வரலாறு கூறுமிடத்து, தேவரெல்லாங்கூடி, "யாஞ்சேரவிருத்தலின் மேருத்தாழ்ந்து தென்றிசையுயர்ந்து, அதற்கு அகத்தியனுரே ஆண்டிருத்தற்குரியார்" என்று அவரை வேண்டிக்கொள்ள, அவரும், தென்றிசைக்கட்போது கின்றவர்............ ..................................துவாரபதிபோந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும், பதினெண்குடிவேளிருள்ளிட்டாரையும், அருவாள ரையுங் கொடுபோந்து, காடுகெடுத்து நாடாக்கிப் பொதியின்கணிருந்து இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கித் திரணதூமாக்கினி யாராகிய தொல்காப்பியனுரை நோக்கி, நீ சென்று 'குமரியாரைக் கொண்டுவருக' எனக் கூறியவாற்றுல்" அக்காலத்துச் சேரசோழ பாண்டியமண்டலங்களுக்கு இடைப்பட்டு நாடாகாத காடுகள் மிக்கிருந்தன வென்றும், அவற்றுள் இராக்கதரே வாழ்ந்தனரென்றும், அவரை அங்கு அணுகாதவாறு விலக்கி, அக்காட்டினுள் பதினெண்குடி வேளிருள்ளிட் டாரையும், அருவாளரையும், குடியேற்றி நாடாக்கித் தாம் பொதிகையின்கண் இருந்தனர் என்று அறியக்கிடத்தலால், அருவாளர், முதலில் குடியேறினமைபற்றி "அருவாநாடு" என்ற பெயர்பெற்றதொரு பகுதியை, அடுத்துள்ள கொங்கின் பக்கத்து, வேளிருள்ளிட் டார் குடியேறியிருக்கவேண்டுமென்றும், கொங்குநாட்டில் வேளிர்கள் (வேளாளர்கள்) மிக்குள்ளகாரணத்தால் இவ்வுண்மை உறுதியாமென்றும் அறியப்படுகிறது. மற்றும்,



பேரூர் கோயில் கோபுரமும் த்வஜஸ்தம்பமும்.

'காந்தன்' என்னும் சோழன், காவிரியாற்றை அகத்தியர்கிருபையால் குடவரையினின்றும் கொணரும்பொழுது கொங்கின்நிலம் காடாயிருந்தமை, மேலும் இவ்வுண்மையை உறுதிப்படுத்துவதுடன் காவிரி சோழர்க்கு உரியதாமென்பதையும் தெளிவுறுத்துகின்றது.

## மண்டலமும் அதற்குப்பெயர் வழங்கியவாறும்.

இனி மண்டலம் என்பதின் பொருள் என்னவென்பதுபற்றிச்சிறிது கவனிப்பேம். மண்டலத்தை ஆள்பவர் மண்டலிகர் என்பது மரபு. தமிழ் வழங்கும் நிலமானது "முடிகெழுவேந்தர் மூவர்க்குமுரிய" என்பதால், சேரசோழபாண்டியர் என்னும் மூவேந்தர் ஆளுகைக்குட்பட்டதென்ப. இதில் சோழதேசமானது இரண்டு பிரிவுபெற்றுத் தென்பாகம் சோழமண்டலம் என்னும் பெயரினும், வடபாகம் தொண்டைமண்டலம் என்னும் பெயரினும் வழங்கப்படுகின்றன. பாண்டியதேசமானது பாண்டியமண்டலம்என்றும், கார்விளக்குமண்டலம் என்றும் பெயர்வாய்ந்ததுபோல், சேரதேசமும் சேரமண்டலம் கொங்குமண்டலம் என இரு கூறு பெற்றதெனக் கூறுவர். வரலாறு தெளிவாய்த் தெரியும்வரை கொங்கும், சேரமும் ஒன்றாக இருந்தகாலம், அல்லது பிரிக்கப்பட்ட காலத்தை வரையறுத்துக்காட்டப் போதிய ஆதாரம் கிடைத்திலது.



ஸுந்தரமூர்த்தி நாயனார்.

## கொங்கு தனிநாடென்பதும் அதுபற்றிய நூல்வழக்கும்.

திருத்தொண்டர் புராணம் பாடிய நமது சேக்கிழார் பெருமான், தமது நூலில் 'கழற்றறிவார் வாலாற்றில்' சேரமான் பெருமாளும், சுந்தரமூர்த்திகளும் சோழநாடு கடந்து சோநாட்டுக்குச் சென்றதை,

"சேய கோங்கர் நாடடைந்தார்
திருவாரூர்ச் சோருடன்" (139)
"கோங்குநாடு கடந்து போய் குலவுமலை
நாட்டெல்லையுற" (140)

எனவும்; வெள்ளானைச் சருக்கத்தில், ஆரூரர் பொன்னிநாடுகடந்து,

"முல்லைப் படப்பைக் கொல்லைமான் துன்னியுகைக்குங்
குடக் கோங்கிலணைந்து"

எனவும்;

திருப்புக்கொளியூர் அவிநாசியில், முதலையுண்டமதலை கரைசேர்ந்தபின்,

"துன்று மணிநீர்க் கான்யாறுங் குறுகற் சுரமும் கடந்தருளி
குன்ற வளநாட் டகம்புகுந்தார்........................." (15)

எனவும்;



ஸோமாஸ்கந்தர், பேரூர்.

புகழ்ச்சோழர்புராணத்தே,

" கொங்கரோடு குடபுலத்துக் கோமன்னர் திறைகொணா " (11)

எனவுங் கூறப்பட்டிருப்பதும்;

ஆறகழூர் பொன்பாப்பினனன மகதைப் பெருமாளைக்குறித்து நடுநாட்டுத் திருவண்ணமலைக் கோயில் மதிற் சுவற்றில் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டொன்றில்,

" கொங்குங் கலிங்கமுங் கொண்டகண்டா ! கொடித் தேருதியர்

தங்கும்படி கொண்ட வாணதிபா !.......................

என்ற கட்டளைக்கலித்துறைச் செய்யுளாலும் கொங்கு வேறு, சோர்பூமி வேறுமாகக் கூறப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

மற்றும், சிதம்பரம் கோயிலில் வெட்டப்பட்டுள்ள சுந்தரபாண்டியன் கல்வெட்டில்,

" கொங்கர் உடல்கிழியக் குத்தியிரு கோட்டெடுத்து "

என்ற வெண்பாவிலும்,

" குட கொங்கத் தடன் மன்னனைக் கொல்களிற் றெடுக்

கொடுபோந்து "

என மாறன் சடையன் மெய்கீர்த்தியிலும்,

" சிங்கத்துருவனைச் செற்றவன் சிற்றம்பலமுகடு

கொங்கிற் கனகமணிந்த.......................'

என்னும் நம்பியாண்டார் நம்பிகள் திருவந்தாதியிலும்,

"கொங்கிற் குறும்பிற் குரக்குத்தளியாய்"

என்னும் சுந்தரமூர்த்திகள் தேவாரத்திலும், கொங்கு நாடுபற்றிக் கூறப்பட்டிருப்பனவற்றாலும்;

செங்குட்டுவன் என்னும் சேரவேந்தன், "கொங்கர் செங்களம் வேட்டான்" என்றும்; அவன் இளவல், "இளங்கோவடிக"ளால் இயற்றப்பட்ட "சிலப்பதிகாரம்" வரந்தருவார் காதையில்,

"பெருஞ்சிறைக் கோட்டம் பிரிந்த மன்னரும்
குடகொங்கரும் மாளுவவேந்தரும்"

எனவும் உரைபெறுகட்டுரையில், "அது கேட்டுக் கொங்கிளங் கோசரும் தங்கள் நாட்டகத்து நங்கைக்கு விழாவொடு சாந்திசெய்ப எனவும் வருவனவற்றாலும் கொங்கு ஒரு தனிநாடு" என்று கருதுதற்கையமின்று.



மஹாவிஷ்ணுவின் மோஹினி அவதாரம்.

சோழரும், பிறரும் இதற்கு வழங்கிய பெயர்கள்.

இனி, தனிநாடாகிய இக்கொங்குமண்டலத்தைச் சோழ அரசர்கள் அரசுபுரிந்த பழங்காலத்து, அவர்கள் இதனை, வெவ்வேறு பெயரிட்டு வழங்கிவந்ததாக அறியப்படுகின்றது. அவை, முதல் 'இராஜேந்திரசோழ' னும், முதல் 'வீரராஜேந்திரசோழ'னும், தங்கள் ஆட்சியில் "அதிராஜமண்டலம்" என்றும், விக்கிரமசோழன்காலத்தில் "வீரசோழமண்டலம்" என்றும், மூன்றும் 'குலோத்துங்கன்' காலத்தில் "கேரளமண்டலம்" என்றும் அழைக்கப்பட்டனவேயாம்.

சோழர்களுக்குப்பின் ஆண்ட பாண்டியரும், பாண்டியருக்குப்பின் அரசுபுரிந்த விஜயநகரத்து அச்சுதராயர், சதாசிவராயர்களும் மேற்குறித்தபடி "வீரசோழமண்டலம்" என்றே வழங்கிவந்ததாக அவர்கள் காலத்துச் சாஸனங்களால் அறியப்படுகின்றது.

கொங்கின் நிலக்களமும் பெருமையும.

இங்ஙனம் வழங்கப்பட்ட இம்மண்டலம், மூன்று பிரிவுடையதென்றும், ஒரு சிலர் நான்குபிரிவுடையதென்றும், அதற்குப் போதிய ஆதாரமும், கல்வெட்டுக்களும், பிறவும் உளவென்றும் கூறுவர். அவைகளை ஆராய்வாம்.

இக்கொங்குமண்டலம் தென்கொங்கு, வடகொங்கு, மேல்கொங்கு என மூன்று பிரிவுகொண்ட ஒரு தனிநாடாய்ச் சிறந்து பின், கீழ்கொங்கு என்ற ஒரு பகுதியைத் தன் வளர்ச்சிக்கேற்பப்பெற்றிருந்ததாய் அறியப்படுகிறது. தென்கொங்கு என்பது கொடுமுடியினின்றும் கிழக்குநோக்கிச் செல்லும் காவேரியின் தென்பாகமும், அதனையடுத்துத் தென்மேல்பாகமும்தொடர்ந்து செல்லும் மற்றையபாகம்; வடகொங்கு என்பது, மேலே



பேரூர் தெப்பக்குளமும் மாதேசுவரர் ஆலயமும்.

குறிப்பிட்ட காவிரியின் பக்கத்து வடபுறமாயும், தென்புறமாயும் பெருகும் அக்காவிரிக்குக் கீழ்புறமாயுள்ள சேலம் ஜில்லாவின் வடபகுதி. மேல்கோங்கு என்பது, காவிரிக்கு மேற்றிசையில் நீலகிரிவரையில் அல்லது வாளையாறு அறுதியாகவும் அமைந்த எல்லைகளையுடையது. கீழ்கோங்கு எனப்படுவது, சேலத்திற்குக் கிழக்குக் கொல்லிமலையின் வடபாலுள்ள ஏத்தாப்பூர், தடாவூர், ஆற்றூர் முதலிய பிரதேசங்கள் சூழப்பெற்றது. இதனை மகதமண்டலம் அல்லது மகதக்கொங்கு என்பாரும் உண்டு. கொல்லிமலைக்குத்தெற்குத் தாரூர் நாட்டுக்குக்கிழக்கு, காவிரிக்கு வடக்கிலுமுள்ள இடங்கள் "மழவநாடு" "மழவக்கோங்கு" என வழங்கினர். இதுபோலவே மற்றொரு மண்டலம் கூடுமிடத்துள்ள இடைவெளிகளைக் "கங்கக்கோங்கு","கருநடக்கோங்கு" என்றும் வழங்கியிருக்கின்றனர். இஃதன்றி சேலம்ஜில்லாவின் வடபாகம் "கங்கமண்டலம்" எனவும் கூறுவர். செந்தமிழ்நாட்டைச்சூழ்ந்த கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டுள், கோயமுத்தூர் உள்ளிட்ட 'சீதநாடும்' மலாடுநாட்டின் பகுதி, அதாவது 'சீதமலாடு' என்னும் இரு கொடுந்தமிழ்நாடும் சேர்த்துப் பெரும்பரப்பாய், வளப்பமிக்கதாய்ச் சிர்சிறந்து புகழ்க்கோர் எல்லையாய் கொங்குநாடு மேம்பட விளங்கியது. இந்நலங்கருதியே கச்சியப்பமுனிவரும், கார்மேகக்கவிஞரும் தத்தமது நூல்களில் இந்நாட்டினை வித்ந்து புகழ்ந்துகூறினர்போலும். அவ்வரும்பாடல்கள் அடியில்வருவன.



ஊர்த்வ தாண்டவம்.

" திங்களுமு ரோகணியுந் திகழ்ந்த திறமென்ன
மங்கலவிணைத் தொழிலு மங்கையரும் வேத
வங்கியும் வளர்க்கு மறையந்தண ருங் காவுங்
கொங்கு மலிகின்ற தொரு கொங்குவள நாடு "



பெரிய கோபுரம், பேரூர்.

"பொற்பு மிகுகொங்கு நாடு செழித்திடப் பூமியெங்கும்
நற்பய னுற்றுச் சுகித்திடு மென்ன நவிற்றுபழஞ்
சொற்பெற வெல்லா வளமும் பொருந்திச் சுரபியொடு
வற்சக மோங்கி வளர்வதன் றேகொங்கு மண்டலமே"

கொங்குமண்டலசதகம்

## இந்நாட்டின்கண்ணுள்ள மலைகளும் அவைகளின் பெயர்களும்.

இக்கொங்கு நாட்டின் வடக்கே பிளகிரிரங்கன்மலை, ஹொசூர் மலைகளும், கிழக்கே கொல்லிமலை, ஜவ்வாதுமலைகளும், தெற்கே பழனிமலை, கோடைக்கானல்மலை, ஆனைமலைகளும், மேற்கே அஸ்தகிரி(மேற்குத்தொடர்ச்சிமலை), வெள்ளிமலைகளும் எல்லைகளாக விளங்கிக்கொண்டிருக்கின்றன. இவைகளன்றி இவற்றின் உட்பிரிவாக, சென்னிமலை, சிவன்மலை, கதித்தமலை செங்கோட்டுமலை, குருவிருந்தமலை, மருதகிரி, முதிரமலை, பொன்னூதியமலை, திரிமூர்த்திமலை, தென்சேரிமலை, குருவவிருடிமலை, தலைமலை, வெண்ணெய்மலை, வராகமலை, ஆனைமலை, கஞ்சமலை, பழனிமலைகளும் இந்நாட்டினை அரண்போல் சூழ்ந்து அழகுபடுத்திக்கொண்டிருக்கின்றன. இங்ஙனம் இந்நாட்டினை மேற்குறித்த மலைகள் சிறப்புச்செய்து விளங்கிக்கொண்டிருக்கின்றனவென்பதற்கு அடியில்வரும் கொங்கு மண்டலசதகம் சான்றாகவுள்ளது. அச்செய்யுள்வருமாறு:—

"கொல்லியும் வைகை மலைவாய்ப் பழனிபொற் கொங்கணவர்
வில்லியுமோதி வராகந் தலைமலை வெண்ணெய்மலை
அல்லியை சென்னிரிகிகஞ்ச வெள்ளி யாவகிரி
வல்லியு ளானை மலைசூழ் வதுகொங்கு மண்டலமே"



கனகஸபை, பேரூர்.

எல்லைகள்.

இந்நாட்டுக்கு வடக்கே மைசூர் ராஜ்யமும், கிழக்கே திருச்சிராப்பள்ளிஜில்லாவும், தெற்கே மதுரைநாடும், மேற்கே மலையாளமும் எல்லைகளாகவுள்ளன. இவையன்றி மற்றோர் எல்லையும் வகுக்கப்பட்டிருக்கின்றன. அது கிழக்கில் மதிற் (கோட்டைக்) கரையும், தெற்கில் பழநியும், மேற்கில் வெள்ளியங்கிரியும், வடக்கில் பெரும்பாலையும் ஆம். இவ்வுண்மை,

"வடக்குப் பெரும்பாலை வைகாவூர் தெற்குக்
குடக்குப் பொருப்பு வெள்ளிக்குன்று—கிடக்கும்
களித்தண் டலைமேவு காவிரிசூழ் நாட்டுக்
குளிர் தண் டலையளவு கொங்கு"

என்ற எல்லைவிளக்கும் வெண்பாவாலும் தெளிவாம். இதனை வலியுறுத்தற்கு

"மதிற்கரை கீட்டிசை தெற்குப் பழநி மலைகுடக்குக்
கதித்துள வெள்ளிமலை பெரும்பாலை கவின்வடக்கு
விதித்துள நான்கெல்லை சூழ வளமுற்று மேவிவிண்ணோர்
மதித்திட வாழ்வு தழைத்திடு நீள்கொங்கு மண்டலமே"

என்ற கொங்குமண்டலசதகப்பாடலும் சான்றாகவுள்ளது.

மேற்குறித்த பாடல்களின் பொருளாவது: "தலைமலையென்பது சத்தியமங்கலம் தாலுகாவிலும், குளித்தலையென்பது திருச்சிராப்பள்ளிதாலுகாவிலும், வைகாவூராகிய பழநியென்பது தாராபுரத்திற்குச் சமீபத்திலும், வெள்ளிமலையென்னும் வெள்ளியங்கிரி கோயமுத்தூர் தாலுகா போளுவாம்பட்டிக்கு மேற்கிலும் இருக்கின்றன" என்பது, தற்காலத்தில் நமக்கு எளிதாகக்கிடைக்கின்ற கல்வெட்டாதிய சாஸனங்களினாலும், பண்டைத் தமிழ்நூல் ஆராய்ச்சியாலும் அறியப்படுகிற விஷயங்களைக் கவனித்தால், இக்



அதிசூர்க்கம்மன் கோயில், பேரூர்.

கொங்குநாடு மேற்காட்டிய எல்லைபைவிட மிகப் பரந்திருந்ததென்று தெரியலாம். அல்லாமல், மைசூர் கங்கப்பல்லவர்களின் ஆதிக்யத்தில், சிர் சிறந்திருந்த 'தலைக்காடு' இக்கொங்கிற்குத் தலைநகராய் விளங்கியிருந்ததென்றும், தேன்சொரியும் வளப்பமிக்க கொல்லிமலை இந்நாட்டின்கணுள்ள மலைகளில் பெயர் சிறந்து பெருமைபெற்றிருந்ததென்றும் நாம் அறியும்போது, இக்கொங்குநாடு எவ்வளவு பரப்புடையதாய்ப் பெருகியிருக்கவேண்டுமென்று ஊகிக்க விடந்தருகின்றது.

## நதிகள்.

இந்நாட்டில் பெருக்கெடுத்து அதனில் மூழ்குவோரைப் புனிதமாக்கும் புண்ய நதிகளில் வானி (பவாநி) ஆம்ராவதி, காஞ்சிமாநதி (நொய்யல்) என்னும் ஜீவநதிகளும் இவற்றின் உபநதிகளாகிய பிறவும், வேறுசில சிற்றாறுகளும் ஆம். இவைகள் இக்கொங்கு நாட்டிற்கே உரியன. காவிரிநதியோ ! இக்கொங்குநாட்டிலும் சிலதூரம் ஓடுகின்றதெனினும், அதனை இந்நாட்டுநதியென ஒருவரும் கூறப்பெறாததால் "சோழர்தங் குலக்கோடி" எனப் பிறர் ஏற்றங்கூறிப் புகழ்ந்து ஓதுவாராயினர்.

## நாடுகளும் புண்யஸ்தலங்களும்.

இக்கொங்கு மண்டலத்தைச் சூழ்ந்து பூந்துறை, தென்கரை, வடகரை, குறுப்பு, ஆறை, காங்கேயம் என்ற பெயர்களில் இருபத்திநான்கு நாடுகளும், அவற்றினை உள்ளிட்ட ஏழூர், தாரூர், சேலம், விமலை, முதலிய கிளைநாடுகளும், அவிநாசி, திருமுருகன் பூண்டி, கொடுமுடி, கரூர், வெஞ்சமாக்கூடல், பவாநி, கொடிமாடச்செங்குன்றூர் என்ற திருப்பெயர்களுடன் சமயாசார்யர்களால் தேவாரம்பெற்ற கொங்கேழ் சிவதலங்களும், பேரூர், குரக்குத்தளி முதலிய பிரபல வைப்புத்தலங்களும், அருணகிரிநாதர் திருப்புகழ் பெற்றுக் குமாவேள் கோயில்கொண்டெழுந்தருளுகின்ற சுப்பிரமன்ய தலங்கள் சிலவும் கொங்குநாட்டை அணிபெறச்செய்துகொண்டிருக்கின்றன.

## இதனை ஆண்ட அரசர்களும்—ஆண்டுகளும்.



பிரவாப்புளி (ஸ்தலவிருக்ஷம்), பேரூர்.

இக்கொங்குநாட்டை பூர்வம் கொங்க அரசர்களும், 10-ஆம் நூற்றாண்டிலிருந்து சோழமன்னர்களும், 12-ஆம் நூற்றாண்டில் பாண்டியர்களும், அரசபுரிந்தனர். 12-ஆம் நூற்றாண்டின் இறுதியில் ஒய்சளரில் "விஷ்ணுவர்த்தனன்" என்னும் அரசன் இதன்மீது படையெடுத்து இந்நாட்டைக் கைப்பற்றிக்கொண்டனன். இவ்வுண்மை, தணுக்கன்கோட்டை வசந்தமாதவாராயப்பெருமாள் ஆலயத்தென்புறச் சுவற்றில், விஷ்ணுவர்த்தனன் பெயரும், அவன் ஈரோடு விஜயமங்கலத்தில் நாட்டுக்கு நன்மையுண்டாகும்படி நாட்டுக் குடிகள் கொடுத்த கொடையையும் விளக்கம்பெறக்கூறி, அவன் வேளாளர் மரபைச்சார்ந்தவன் என்ற விவரமும் சாஸனமாக வெட்டப்பட்டிருக்கின்றது. இஃதன்றி, சேலம், கோயமுத்தூர் ஜில்லாக்களில் காணப்படும் கல்வெட்டுக்களில் 'வீரசோமேசுரன்' 'வீரவிசுவநாதன்' 'வீரராமநாதன்' முதலிய ஒய்சள அரசரும் விஷ்ணுவர்த்தனனுக்குப்பின்னர் அரசுபுரிந்ததாக அறியப்படுகின்றன.

இதற்குப்பின்னர், விஜயநகர அரசர்களும், மதுரை நாயக்க மன்னர்களும், மைசூர் அரசர் கிருஷ்ணராஜ வுடையராதியோரும், ஐதர் அலிகான், திப்பு முதலிய மகமதிய அரசர்களும் செங்கோலோச்சி இறுதியாக 1792-ஆம் ஆண்டில் ஆங்கிலஅரசர் ஆளத்தொடங்கினர். இவ்வளவே, கொங்குநாடும் அதன் பூர்வீக வரலாறாக வழங்கப்படும் செய்திகள்.

## கொங்குநாடும்—உட்பிரிவு இருபத்திநான்கு நாடுகளும்.

பண்டைத்தமிழரசர் ஆளுகையில், கொங்கு இருபத்திநான்கு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அப்பிரிவு இக்காலத்திலும் யாதோர் மாறுதலுமின்றி பழைமைபோல் வழங்கப்பட்டுவருகின்



இறவாப்பனை (ஸ்தலவிருக்ஷம்), பேரூர்.

றன. அந்நாடுகளின் பெயர்கள் அடியில்வருமாறு:—



காலேசுவரர் (அரசம்பலவாணர்) கோயில், பேரூர்.
இதில் காணும் அரசமரமும் ஓர் ஸ்தல விருக்ஷம்.

1. பூந்துறை, 2. தென்கரை, 3. காங்கேயநாடு, 4. பொங்கலூர் நாடு, 5. ஆறைநாடு, 6. வாரக்க நாடு, 7. திருவாவினன்குடிநாடு, 8. மணநாடு, 9. தலையநாடு, 10. தட்டையநாடு, 11. பூவாணியநாடு, 12. அரையநாடு, 13. ஒடுவங்கநாடு, 14. வடகரைநாடு, 15. கிழக்குநாடு, 16. நல்லுருக்கநாடு, 17. வாழவந்திநாடு, 18. அண்டநாடு, 19. வெங்காலநாடு, 20. காவடிக்கன்னடு, 21. ஆனைமலைநாடு, 22. ராசிபுரநாடு, 23. காஞ்சிக்கோயில்நாடு, 24. குறும்புநாடு.

இந்நாடுகள் பெரும்பாகம் கோயமுத்தூர் ஜில்லாவிலும், சிறுபாகம் சேலம் ஜில்லா திருச்செங்கோடு தாலூகாவிலும் திரிசிராப்பள்ளி குளித்தலைக்கருகிலும் மதுரை ஜில்லா பழனிதாலூகாவிலும் இருக்கின்றன. இவ்விருபத்திநான்கு நாடுகளில் இப்பேரூர், ஐந்தாவதாகிய ஆறைநாட்டைச் சார்ந்தது. இவ்வுண்மை, கொங்குமண்டல சதக ஊர்த்தொகையில்,

"சேவைநக ரன்னியூர் வெள்ளாதி கோமங்கை
திசைபுகழவாழ் முடுதுறை
தென்கவசைதுடியலூர் நீலநகர் 'பேரை' யொடு
தெக்கலூர் கறைமாதையும்"

என வரும் செய்யுட்டொடரால் அறியலாம்.



பட்டி விநாயகர் கோயில், பேரூர்.

## ஆலயங்களும் அமைந்த விதமும்.

பூர்வம் ஒருகாலத்தில் வடநாட்டினின்றும் கொங்குநாட்டுக்கு ஸ்தலயாத்திரையாகவந்த சிலசெல்வர்கள், பிறவாநெறித்தலமாகிய இப்பேரூரின் சிறப்பையும், அதிலுள்ள அதிசயங்களையும், நடராஜப்பெருமானது பெருமையையும் கண்டு, மகிழ்ந்து, அன்பின் முதிர்ச்சியால்



அழகிய சிற்றம்பலம், பேரூர்.

அக்கடவுளிடத்துக் காதல்கொண்டு, சிற்றாலயமாயுள்ள அவ்வாலயத்தைப் பேராலயமாகவும், சிற்பத்தின் பெட்டகமாகவும் கட்டிமுடிக்கத்தீர்மானித்து, அத்தீர்மானத்தை அப்பொழுது அங்கு அதிகாரம் நடாத்திவந்த "கோயவரசன்" என்பானிடம் தெரிவிக்க, தெய்வசிந்தைமிக்குடைய அச்சிற்றரசன் மிக மகிழ்ந்து, அவர்கள் கருத்துக்குடன்பட்டு, அக்கணமே தென்னாட்டிலுள்ள சிற்பம் வல்லார் பலரை வரவழைத்து, பேரூருக்கு அணித்தாயுள்ள மருதமலை, விண்டுமலை, ஆதியமலைகளிலிருந்து சிற்ப சாஸ்திரத்தில் சொல்லியுள்ள முறையையொட்டி மலைகளிலேயே கற்களின் நுனியையும் அடியையும் கவனித்து, தலபுராணத்திலுள்ள ஐதிகங்களை ஸ்தூலமாக வரைந்துகொண்டு, சிற்பவுருவங்கள் நன்கு சிறப்பதற்கேற்ற பெரிய கற்களையுடைத்து எடுத்துவந்து, ஆலயஞ்சேர்ப்பித்து அழகிய தூண்கள், மதில்வரிசைக்கற்கள், தளவரிசைக்குரிய பெரும்பாறைகள் ஆகியவைகளை ஆய்ந்து ஆலயத்தை அழகுபெறக் கட்டிமுடிக்கச் செய்தனர், அவர்கள் ஆதியில் கனகசபையையும், அதன் பின்னர் பட்டிப்பெருமான், பச்சைநாயகியார் ஆலயங்களையும் அதன்பின் மற்றும் சிற்றாலயங்களையும், சிங்கக்கிணறு முதலியவைகளையும் கட்டச்செய்தனர்.

ஆலயத்தின் எதிரிலுள்ள அழகிய திருக்குளம், மேலே குறித்தவர்களால் எடுக்கப்படவில்லையென்பதற்கு அத்திருக்குளத்தின் நான்குபக்கங்களிலுமுள்ள படிக்கட்டுகளின் கற்சுவர்களில் 16 இடங்களில், "திருக்கணாம்பி சங்கரய்யன் குமாரன் மாதையன் சேவை" என்று வெட்டப்பட்டுள்ள சாஸனங்கள் ஆதாரமாகவுள்ளன. சாஸனம் கன்னடபாஷையாயிருப்பது கொண்டும், 'திருக்கணாம்பி' என்பது மைசூர் நாட்டில் பிரசித்திபெற்ற ஓர் சிற்றூராய் விளங்குவதினாலும், திருக்குளத்தின் மேற்பாகத்திலுள்ள சிற்றாலயத்திற்கு "மாதேசுவரர்" என்ற பெயருண்மையாலும், இத்திருக்குளமும், அதின் மேற்பாலுள்ள கோயிலும், மைசூர் அரசர்களின் பந்துக்களான "மாதையன்" என்னும் பிரபுவால் கட்டச்செய்திருக்கவேண்டுமென்றே தீர்மானிக்கின்றோம். இத்தீர்மானத்திற்கேற்ப



நந்தவனம், பேரூர்.

ஒவ்வோராண்டு பங்குனிமாதப் பிர்ம்மோற்சவத்தின் 9-ஆம் திருநாளாகிய தெப்ப உற்சவத்தில் மாதேசுவார் ஆலயத்தில், மைசூர் மன்னர்களது உபயத்தில் சுவாமி மண்டபக் கட்டளை கொண்டருள்வதும் இவ்வுண்மையை உறுதிப்படுத்துகின்றது.

மேலேகுறித்த பட்டிப்பெருமான், கனகசபை முதலிய ஆலயங்களைக்கட்டி முடிக்கச்செய்தவர், வடநாட்டுப்பிரபுக்களில் சிவபக்திமிக்குடைய சிலரும், கோயவாசனுமாயிருக்க, அறியாதார் சிலர், இவ்வாலயங்கள், சேரவாசர்களால் கட்டுவிக்கப்பட்டதென்றும், சிலர் சோழவாசர்களால் கட்டுவிக்கப்பட்டதென்றும், சிலர் மதுரை நாய்க்கமன்னர்களால் கட்டுவிக்கப்பட்டதென்றும் கூறுகின்றனர். இவை உண்மையுடையனவல்ல. ஆயின், மதுரை நாய்க்கமன்னர்களுக்கு மைத்துனமுறையுடைய அழகாத்திரிநாய்க்கரவர்களால் கனகசபை மட்டும் பழுதுபார்க்கப்பட்டது. இவரதுகாலம் கி. பி. 16-ஆம் நூற்றூண்டு. அழகாத்திரி நாய்க்கர் உருவச்சிலை இப்பொழுதும் கனகசபைக்கெதிரிலிருக்கிறது.

## ஸ்தலமகிமை.

—சாற்றுமதன்
பேர்பலவாம் பேரூர் மிரவா நெறிவளருஞ்
சீர்பலசேர் மேலைச் சிதம்பரம்
(திருப்பேரூர்—கின்னவிடுதூது)

திருப்பேரூர் என்னும் இப்புண்ணியப்பதி கொங்குநாட்டில் மிகச்சிறந்தது. இதனைப் பெரியபுராணமும், பேரூர்ப்புராணமும், தேவாரத் திருப்பதிகங்களும், பிள்ளைத்தமிழ், கோவை, உலா, அந்தாதி, வெண்பா முதலிய பிரபந்தங்களும் மிகப் புகழ்ந்து பாராட்டிக் கூறியிருக்கின்றன. அல்லாமல், எல்லாம் வல்ல இறைவரே, இத்திருத்தலத்தைப்பற்றி, "நாமே பேரூரைப்படைத்து நடனமுஞ்செய்தோம். அதுதொடங்கி ஆத்



சாந்தலிங்கசுவாமிகள்மடம், பேரூர்.

மாக்கள் நமது திருவடியிற்கலக்கும் வண்ணம் அனவரதமும் ஆனந்தத்தண்டவம் செய்தருளுகின்றேம். வெள்ளிமலையும் ஆயினேம். நமது முடியிலுள்ள கங்கையே காஞ்சி நதியாகத் தவழும். இத்தலத்தை நாம் அத்தாணி நிலயமாகக்கொண்டு வீற்றிருக்கின்றேம். இத்தலம் அழிவடையாது நித்யமாய் நிலைபெற்றிருக்கு மென்பதற்கு இறவாப் பனை, பிறவாப்புளி என்னும தலவிருக்ஷங்களே போதிய சான்றும். நித்தராய் இருக்கக் கருதினர் இத்தலத்தே நம்மை வழிபட்டுச் சிரஞ்சீவியாய் இருக்கின்றனர். முத்திபெற்றவர் அளவில்லாதோராவர்.” எனக் கூறுவாராயின், இச்சிவதலம் எத்துணை மகிமையுடையதாய், பேறுபெற்றதாய், அளவில் பெருமையுடையதாய் இருத்தல்வேண்டும். எனவே, இத்தலமகிமையை எம்போலியரால் இனைத்தெனக்கூற முடிந்ததோ! கூறற்கரிய சிறப்பினையுடைய இத்தலமகிமையை உள்ளவாறுணர்ந்து இத்தலத்தடைந்து நதியில் விதிப்படிமூழ்கிப் பெருமானை வழிபட்டுப் பேறுபெற்றோர் பெருந்தொகையினராவர். அவர்கள் வரலாறுகளை அறியின், பின்னும் பேரூரின் பெருமை விளக்கமுறும். ஆனதால், அங்ஙனம் பேறுபெற்ற பெரியோர்களின் சிலரது அறிய வரலாறுகளைச் சிவநேசர் உணரும் பொருட்டு, ஈண்டு சுருங்கக்கூறுவாம். அவர்களது வரலாறு வருமாறு:—

(1) பண்டொருகாலத்தில் வியாஸமுனிவர், “காத்தற்கடவுளாகிய திருமாலே வேதங்களெல்லாம் விளக்கும் பரம்பொருள்” என்றுகூற அது பொறுதமுனிவர்கள் “உயர்ந்தோர்அனைவரும் சிவபிரானேபரமெ”ன்று தெளிந்திருக்கவும், அதற்கு மாறாக நீவிர் விஷ்ணு பரம்பொருள் என்று கூறினீர். அங்ஙனம் கூறும் இம்மொழியை நீர் காசியில் விசுவேசர் திருமுன்னர் கூறுவீராயின், நாம் ஒப்புக்கொள்வோம் என்றனர். வியாஸரும் அப்படியே கூறுகின்றேம் என்று காசியை அடைந்து, கங்கையில் மூழ்கி, விசுவநாதர் சந்நிதியின் எதிரேநின்று, கரந்தூக்கி விஷ்ணுவே பரம்பொருள் என்று கூறினர். அஃதுணர்ந்த திருநந்திதேவர், வியாஸரதுமேலெழுந்த கரம் கீழே தாழாது நின்ற நிலையிலேயே ஸ்தம்பிக்கும்படி சாபமிட்டனர். அச்சாபம் அப்படியேபலித்ததால் வியாஸாஞ்சி,

திருமாலைத்தியானிக்க, அவர்தோன்றி வியாஸரை முனிந்ததுமன்றிச் செய்த பிழைக்குச் சிவபிரானைத் தொழுதுய்யுமாறு வாய்மொழிந்து மறைந்தனர். அவ்வாறே வியாஸர், தேவர் தேவாகிய சிவபெருமானைக் குறையிரந்து வேண்டியபொழுது, அருட்கடலாகிய அம்பிகைபாகர் அவர்முன்தோன்றி "பேதமையாற் கூறிய நினது பிழைக்குப் டரிகாரம் வேண்டுமாயின், தென்றமிழ்நாட்டுக் கொங்கில் பேரூர்த் தலமடைந்து காஞ்சிநதியில்மூழ்கி, பட்டிநாயகியரோடு பட்டிநாதர் என்னும் பெயரில் கோயில்கொண்டருளும் பெருமானை வணங்கின், நினது தூக்கிய கைகள் கீழே தாழும்" என்றருளினர். முனிவரும் அடிபணிந்து அங்ஙனமே இத்தலமடைந்து பட்டிநாதரை வழிபட்டுச் சாபம்நீங்கி இன்புற்றனர் என்பது.

(2) ஸப்தபுரியில் ஒன்றாகிய காசிமாநகரில் இறந்த ஆத்மா, மீண்டும் பிறப்படையாமல் முத்தி யெய்தும் சிறப்பினைக்கேட்ட விசுவாமித்திரர், அக்காசித்தலத்தைச்சார்ந்து அங்கேதங்கிச் சிவபெருமானைக் கருத்திற்கொண்டு சிவயோகஞ்செய்துவருகையில், ஒருநாள் செம்பொன் அம்பலச் சிற்சபாநாயகர் திருப்பேரூரின் கண்ணுள்ள வெள்ளியம்பலத்தில் திருநடனஞ்செய்தருளுவதையும், அப்பேரூர் எல்லையில் வசிக்கும் உயிர்கள் செய்யும் பாவங்களைத் தண்டம்புரியாது தண்ணருள்பாலித்துப் பேரின்பவீடடையுமாறு பெருங்கருணை செய்வதையும், யோகபலத்தால் இனிதுணர்ந்த விசுவாமித்திரர், காசியை நீத்து விரைந்து பேரூரடைந்து, காஞ்சிமாநதியில் மூழ்கி, அம்மை அப்பரை அடிவணங்கி வெள்ளியம்பலத்தைத் தரிசித்தனர். இங்ஙனம் சிறிதுகாலம் நியமந்தவறாது சிவபெருமானைத் தரிசித்து வருகையில், ஒருநாள், அப்பெருமான் அருள்சுரந்து இடபாரூடராய் முனிவருக்குக் காட்சியளித்தனர். அவ்வருங்காட்சியைத் தவத்தின் பெரும்பயனெனக் கருதிய விசுவாமித்திரர்,போனந்தவாரிதியில் ஆழ்ந்தி, அட்டாங்கநிலந்தோயப் பன்முறை வீழ்ந்து தொழுது எழுந்து பெருமானை நோக்கி, பிறவாநெறித்தலத்துக் கோயில்கொண்டருளும் பெமமானே! பிரம்மவிஷ்ணுக்கள் தேடரிய நும் பெரும்பதத்தில் என்றும் மறவாப் பேரன்பு சுரக்குமாறு தேவர் திருவருள் பாலிப்பதோடு, முத்தித்தலமாகிய இம்முதுநகரில், நுமது பொற்றாள்பரவும் அன்பர்கள், அவர்கள் விரும்பும் அபீஷ்டங்களை இனிதருளியும், இத்தலம் இதுமுதல் "குருக்ஷேத்திரம்" என்று பெயர்பெறுமாறும், காசியில் ஓராயிரம் பேர்களுக்கு அன்னமளிக்கும் புண்ணியம் இத்தலத்தில் இரப்போர்க்கு ஈயும் பிச்சையால் எய்தவும் அருட்பாலித்தல் வேண்டுமென்றிறைஞ்சினர். வேண்டுவார் வேண்டுவதீயும் வித்தகனும் அவ்வாறே அருளுவதாகக்கூறி மறைந்தனர்.

(3) விடையேறும்பிரானாகிய விமலன், விசுவாமித்திரமுனிவருக்குப் பேரூரில் அருளிய பெருவரத்தினால், தவத்தினராகிய ஆன்றோரேயன்றி, பாவிகளும் ஆதிபுரியை அடைந்து பிறவாநெறியருளும் பிறைச்சடைப்பெருமானை வழிபட்டு முத்தியைப் பெறுதலால் நிரயத்தில் அழுந்துவாரின்றி யமலோகம் பாழாயிற்று. உடனே யமன், இப்பதியை அடுத்து, தக்ஷிணகங்கையாகிய ஸ்ரீ காஞ்சிநதியில் ஸ்நானஞ்செய்து சிவசின்னங்களாகிய விபூதி ருத்திராக்ஷங்களை அணிந்து, பட்டிசுவரரையும், பச்சைநாயகியாரையும் பணிந்து, இரஜத சபையையுந்தரிசித்து ஓரிடத்தே தனித்திருந்து திருவைந்தெழுத்தை

ஜபித்தான். மற்றைகாட்காலையில், நித்யகர்மங்களை விதிப்படி முடித்து சிவலிங்கப்பிர திஷ்டை செய்து பக்தியோடு பூஜித்தனன். இங்ஙனம் பூஜித்துவருகையில் ஒருநாள், யமனது பூஜைக்குவந்த இறைவர், அவனுக்குக் காட்சிதந்து, "நீ யாது கருதி எம்மைப் பூஜித்துவருகின்றனை?" என்று திருவாய்மலர்ந்து வினவினர். இயமன் அஞ்சலிபந்தனுய் நின்று "என்னை யாளுடைய பெரும! பாவிகளும் தங்களைத் தரிசித்து வீடுபெறுதலால் எனது அரசாட்சி நீங்கினமைபற்றி இத்தலத்தை அடைந்து விஷயத்தை விண்ணப்பிக்கவந்தனன்" என்று விடையிறுத்தனன்.

அதனைக்கேட்ட அம்பிகைபாகன், அந்தகனை நோக்கி, "தென்திசையோய்! உயிர்கள் எவ்விடத்திலேனும் திரிகாண சுத்தியாய் நல்வினைப்பயனுகிய புண்யத்தைச் செய்கின்றதோ, அவ்வுயிர்களிடத்து நினது அதிகாரம் செல்லாது, தீங்குநீங்க நல்லறம்புரியும் ஆத்மாக்களே, எம்பாலடைந்து அன்புசெலுத்திப் புண்யப்பேறடைவர். அல்லாதார் எம்மையடைந்து வழிபடார். ஆதலால், அவர்கள் மாட்டு நினது அதிகாரத்தைச் செலுத்துக." என்று ஆணைமொழிந்து, இன்னும் யாது விருப்பம் என்றனர். யமன், "இறைவர் பெருமானே! தேவர்திருவடியில் பதித்த போன்பைத்தருவதோடு முத்தியை அளிக்கும் இம்முது நகரில், தங்களை அன்புடன் வழிபடுவார்க்கு அவர்கள் விரும்பிய இஷ்டகாம்யங்களை இனிதருளியும், இது முதல் இத்தலம் "குருக்ஷேத்திரம்" என்று பெயர் வழங்குமாறு அருள்பாலித்தல் வேண்டும்" என்றும் இறைஞ்சினன். வேண்டுவார் வேண்டுவதியும் வித்தகனும் அவ்வாறே அருள்பாலித்து மறைந்தனர். அந்தகனும் தன்னுலகடைந்து தன்னரசாட்சி மேற்கொண்டனன். மேற்குறித்த வாலாறுகளனறிப் புராணிகர் கூற்றுக:—

"புண்ணியம் புரிவார் பிறவாநெறி புக்கான்
மண்ணின் மீட்டும்வந்துரு குடன்வான்கதி பெறுவார்
கண்ணுதி வினைபுடைவர் கனுகின் மற்றவர்போ
லெண்ணு முத்தியிற் கலப்புறு மியல்புறமாட்டார்" (19)

"போதிமார் புகுந்திடும் புண்ணியத் திறத்தாற்
றீதுதான் பெரிதொழிதா வெஞ்சுதீ வினையைக்
காது கூற்றிடைக் கழிஇமறு பிறப்பிற் பேரூர்புக்
கேத நீங்கவான் முத்தியி லிரண்டறக் கலப்பார்" (20)

"அல்லதுஉ மறன்கடை புரிவார் தொல்லையறத்தார்
னல்ல நெஞ்சினா யறன்கடையினை நடுங்கி
யொல்லையாதி மாநகர் புகுந்தொழுக் கொடும் பணியின்
வல்லைநீத்திருள் வினையினை வாம்பிலின் புறுவார்." (21)

"ஈது தீவினையாளர் பேரூர் வயினெய்துக்
கோதிலாத கற்பயன்........................................"

எனவரும் செய்யுட்களாலும் திருப்பேரூர்த் தலமகிமை செவ்விதின் உணாலாகும்

இன்னும், "அங்கிரகன் கதிபெறு படலம்," "குலசேகரன் குட்டநோய் தீர்ந்தபடலம்" "கௌரிதவம்புரிபடலம்," முதலியவைகளிலும் இத்தலமகிமை இனிதுணரப்படும். பேரூர் என்னும் பெயரின் காரணமாவது:—

பேரூர் என்பது, பிறவாநெறியைத் தந்தருளும் பெரியவூர் அதாவது முக்தி வீடாம். இத்தலம் இத்தகைய பெருமைக்கு உறைவிடம் என்பது,

—"மேவுபுகழ்
எட்டி லடங்காமல் எவ்வுலகுந் தன்மணமே
நாட்டு விக்குங் கொங்குவள நாட்டினுள்—போட்டிவினைத்
தூருசெல்லாஞ் சின்னவூராய்ப் புறங்கொடுக்கப்
பேரூரெனத் திகழ்பே ரூர்"—

(விள்ளைவிநோதம்)

"அளவிலாப் பற்பல வளமெலா மலிதலிற்
பேரூர் பேரூர் பேரூ ரிதுவெனப்
பேர்பெற் றிலகிய வூர்"

(மும்மணிக்கோவை)

"ஒப்பிலா வளஞ்சேர் திப்பியப் பேரூர்
அரச வனத்தில் இரசத மன்றத்து
நட்ட மிட்டருளிய பட்டியெம் பெரும!
பத்தருக் கெய்ப்பினில் வைத்திடும் வைப்பே
யானென் று வேண்டுவ தளதே யதுதா
னுண்பன வல்லப் பூண்பன வல்ல
வூர்ந்திடற்குரிய தாவர மல்ல
விம்மை யம்மை யும்மையு மலவா
வென்றிடு மிவற்றி னென்று மற்றன்றென
நீதான் விழைந்த தியாதோ துதி யெனிற்
பேரூர் நெஞ்சிற் பிரியா துறைதருஞ்
சீரூடியா ரடியார்க் கடியார்
மன்னிய மனை சித்தகற்றிய
துன்னரும் பாதத் துகளதா லதுவே"

"துகளாய வெப்பொருளுந் தோற்று மலமா
திகளான மாசேதுஞ் சோரா—வகழார்
பிறவா நெறிபடைத்த பேரூரை யண்ணில்
பிறவா நெறித்த பேர்க்கு"

"பேரைப்பதியென் றொருகாற் சொலினமன்பேர் கணக்கிற்
பேராப்பதியா தகற்றிடு மும்மலம் பேர்த்தவர்தம்

பேரைப்பதியென வாக்கிடும் வேண்டிய பேறுதரும்
பேரைப்பதியினை யொத்திடுமோ கொல் ! பிறபதியே"

(மும்மணிக்கோவை)

"இறவாமையை வேட்டவரெல்லா மெறிநீர்க்காஞ்சி மருங்கடுத்த
பிறவாநெறியென் றுலகேத்தும் பேரூர்..............................." (10)

(பேரூர்—தலவிசேடப்படலம்)

என்பதனுலும்; மற்றும்,

"உரைத்த நாற்பயனுட் பெரும்பயனுய தோள்ளியவீடஃதுறலாற்
றரைத்தலைப் பேரூரேன்மர்கள்; சிலரெத்தலத்தினுஞ் சாற்றுநாற்பயனு
நிரைத்தலிற் பேரூரென்மர்கள்; பலரே நீடியவாதிமாநகரை
யிரைத்தெழுகடல்போல் வளத்தினும் பேரூரென்மர்கள் பற்பலாயிரரே"

(திருநகரப்படலம்)

"நீரூர் கலிகன்ம நாசினியென்றொரு நீணதிசேர்
பேரூர்......................................................" (47)

(முசுகுந்தன் முகம்பெறுபடலம்)

"அனையதலம் வண்டிசை மூரலவடர் மெல்லிதழின் முறுக்கவிழு
கனைமென் பொகுட் டம்போருகத்தி னணுகோடிமத்தி னிளம்பிள்ளை
கனைவெண்டாங்கர்தவழ்ந்தசைப்பைக்களித்துத்துயில் கூர்தடம்பொய்கை
முனைவனருள்போற்குளிர்பெருக்குமூதூர்க்காஞ்சிப் பேரூரே" (15)

(குலசேகரன் குட்டநோய் தீர்த்தபடலம்)

எனவரும் புராணப்பாடல்களாலும்,

பேரூருக்கு பெயர்வந்த காரணம் புலனும். இவைகளேயன்றிப் பின்னும் இத்தலத்திற்குப் பேரூர்ப்புராணம் தலவிசேடப்படலத்தில், அடியில்வரும் பெயர்களும் சிறப்பாக வழங்கப்படுகின்றன. அப்பெயர்கள் வருமாறு:—

1. பத்திபுரி, 2. பாம்புரம், 3. ககனபுரி, 4. போதபுரம், 5. நாட்டியபுரம், 6. ஆதிபுரி, 7. வன்மீகநகரம், 8. மேருநகரம், 9. ஞானபுரம், 10. பிரமநகரம், 11. குருக்ஷேத்திரம், 12. பசுபதிபுரம், 13. இரஜதசபை, 14. முத்தகானம், 15. சிற்சபை, 16. கலியாணபுரம், 17. போதிக்கானம், 18. தேனுபுரம், 19. பிறவாநெறி, 20. தவசித்திபுரம்.

மேற்குறித்த பெயர்க்குரிய காரணங்களை விரித்தெழுதின் நூல் விரியுமென்றஞ்சி விடப்பட்டன. விரும்புவோர் பேரூர்ப்புராணம் தலவிசேடப்படலம். 25, 26, 27, 28, 29. 30, 31, 32, 33, 34, 35, 36, 37, 38, 39, 40, 41, 42, 43, 44, 45. எண்ணுள்ள பாடல்களைக்காண்க.

## மூர்த்தி விசேடம்.

—மூர்த்திதனை

"வந்தித்தோர் வேண்டும் வரம்பெறுவர் சிந்தையுள்ளே
சிந்திப்போர் பாவமெல்லாந் தீய்ந்திடுவர்—சந்தித்தே
தோத்தரித்தோ ரெய்தாச் சுகமுண்டோ பரவங்கண்
மாத்திரமோ சன்மவிடாய் மாறுமே"

(திருப்பேரூர்—கின்னிவிடுதூது)

கொங்கில் காஞ்சிமாநதி வளஞ்சிறந்த பேரூர் என்னும் பெருந்தலத்தில் ஆண்டவனது அரிய நடன தரிசனத்தைக் கண்டு களிக்க, பிரம்மாவும் விஷ்ணுவும், கோமுனி, பட்டிமுனி அவதாரமெடுத்து இங்கு வெகுகாலம் தவம் புரிந்து சிவபிரானது நர்த்தனத்தைத் தரிசித்து மகிழ்ந்தனர். இம் மூர்த்திக்குப் பட்டிநாதர், பட்டீசுவரர், பட்டிப்பெருமான் என்ற பெயர்களேயன்றி, தம்மை மெய்யன்புடன் வழிபடும் நல்லன்பர்கட்குப் பிறவா நெறியைத் தந்தருள்வதால் 'பிறவாநெறியான்' என்ற காரணப்பெயரும் உண்டு. அல்லாமல், காலவமுனிவர், விசுவாமித்திரர், வியாசர், நாரதர், கௌரியம்மை, தெய்வயானையார், யமன், காமதேனு ஆகியோர், தங்களது குறை நிவர்த்தியின்பொருட்டுத் தலத்துக்கெழுந்தருளித் தவம்புரிந்து இன்புற்றதாகத் தலபுராணத்தால் அறியப்படுகின்றது.

பட்டிப்பெருமானுக்குத் தலபுராணத்தில், யுகநான்கிலும் வழங்கப்பட்ட பெயர்களும், வணங்கியோர் பெயர்களும், தலம், தீர்த்தம், வனம், விருக்ஷம் முதலியவைகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் அடியில்வருமாறு:—

கிருதயுகத்தில்:—இங்குக் காமதேனு கடவுளைப் பூசித்ததுபற்றி அவருக்கு 'வன்மீகநாதர்' என்றும், ஸ்தலத்திற்கு 'ஆதிபுரி' யென்றும், நதிக்கு 'வன்மீகம்' என்றும், வனத்திற்குத் 'திந்திரிணி' (புளி) என்றும், பெயர்கள் வழங்கப்பட்டன.

திரேதாயுகத்தில்:—திரிபுவனச் சக்ரவர்த்தி பூஜித்துப் பெருமைபெற்றதால் சுவாமிக்கு "அமிர்தேசுவரர்" என்றும், ஸ்தலத்திற்கு 'தவசித்திபுரம்' என்றும், நதிக்குப் 'பிறவாநெறி' என்றும், வனம் 'புன்னை' யென்றும், பெயர்கள் வழங்கப்பட்டன.

துவாபரயுகத்தில்:—முசுகுந்த சக்ரவர்த்தி பூஜித்ததால் 'அரசவனநாதர்' (தருமநாதர்) என்றும், ஸ்தலம் 'மேலச்சிதம்பரம்' 'தக்ஷணகைலாயம்' என்றும், நதிக்குப் 'பிப்பிலம்' என்றும், வனத்திற்கு 'பஞ்சவர்ணம்' என்றும் பெயர்கள் வழங்கப்பட்டன.

கலியுகத்தில்:—தில்லை மூவாயிரவர்பூஜித்ததால் 'பட்டீசுவரர்' என்றும், தலம் 'பேரூர்' என்றும், நதி, 'காஞ்சி' என்றும், வனம் 'அரசவனம்' என்றும் பெயர்கள் வழங்கப்பட்டன.

## தீர்த்தங்களின் பெருமை.

"தோய்ந்தோர்கள் பாவஞ் சுடர்முன் னிருளென்னத்
தேய்ந்தோடத் தீர்த்தளிக்குந் தீர்த்தங்க—ளாய்ந்தக்காற்

காஞ்சி நதியர்தி கனிப்பிலவா மொவ்வொன்றும்
வாஞ்சை யறிந்தே யுதவ வல்லனவாம்"

(திருப்பேரூர்—பிள்ளைவிநோத)

காஞ்சிமாநதி எக்காலமும் தன்னிடத்தே புனிதமுடையதாய், ஜீவநதியாய் விளங்குஞ் சிறப்புடையது. இதுதவிர 'காங்கேய சமுத்திரம்' 'சோட்டையாண்டி குட்டை' என்ற இரண்டுபெரிய ஏரிகளும்; பிரமதீர்த்தம், காலவதீர்த்தம், சூரியதீர்த்தம், இந்திர தீர்த்தம், கந்ததீர்த்தம், அகஸ்தியதீர்த்தம், யோகிதீர்த்தம், சித்ததீர்த்தம், வசிட்டதீர்த்தம், வாமதேவதீர்த்தம், பார்க்கவதீர்த்தம், வியாழதீர்த்தம், சிவலிங்கமுகதீர்த்தம், துர்க்கைதீர்த்தம், க்ஷேத்திரபாலதீர்த்தம், காளிதீர்த்தம், சக்கரதீர்த்தம், குலசேகரதீர்த்தம், நந்திதீர்த்தம், அக்கினிதீர்த்தம், யமதீர்த்தம், யக்ஷதீர்த்தம், சண்டேசரதீர்த்தம், சோம தீர்த்தம், பிரமதகணதீர்த்தம், சப்தமாதர்தீர்த்தம், பாலதீர்த்தம், முசுகுந்ததீர்த்தம், அங்கிரதீர்த்தம், சோமதீர்த்தம், காமதேனுதீர்த்தம், கன்னிதீர்த்தம், முதலியவைகளும், இருக்கின்றன. இவைகளன்றி நச்சுப்பொய்கை, சிங்கக்கிணறு திருக்குளங்களும் உண்டு. எனினும், இவைகளில் பெரும்பாலான தீர்த்தநிலயங்கள் இருக்குமிடம் அறியாமலும் பெயர்மறைந்தும், தூர்ந்தும்போயின. சில இருந்தும் ஸ்நானபானங்களுக்கு யோக்யமின்றிச் சிதிலமாயுள்ளன. சென்றனபோக எஞ்சியிருப்பவை, பிரமதீர்த்தம், காலவதீர்த்தம், சிங்கமுகதீர்த்தம், பாலதீர்த்தம், சக்கரதீர்த்தங்களும், திருக்குளமும், காஞ்சிமாநதி முதலியவைகளுமாம். இவைகளின்பெருமை அடியில்வருமாறு:—

காஞ்சிமாநதி:—திருப்பேரூருக்கு மேற்கு 12 மைல் தூரத்தில் வானளவ வளர்ந்து, தன்னில்பல அரிய ஔஷதிகளையும், விம்மிதங்களையும் உடையதாய், சிவபெருமான் தன்னில் தங்கும் பெருமை கருதிக் கம்பீரத்துடன் நிமிர்ந்ததாய் 'வெள்ளிவெற்பு' 'இரஜதகிரி' என்ற பெயர்களைப் பெற்றதாய் விளங்கும் வெள்ளிமலையின், வலப்பாகத்தின் வேரினின்றும் இந்நதி சார்ந்து வெள்ளிக்குன்றமே உருகி நன்னீராய், துல்லிய வெண்ணிறந்தாங்கி அலையெறிந்து நெருங்கிய இருகரைகளையும் பெயர்த்தெறிந்து பெருகிப் போராவாரத்துடன் பன்னாள் பெருந்தவம் இயற்றிய பகீரதற்காக வானின்றிழிந்த கங்கையைப்போல், இந்நாள் பல்கோடி ஆத்மாக்கள் ஈடேறும்பொருட்டுப் பொன்கொழித்துத் தன்பரிசம் பட்டவஸ்துக்களெல்லாம் பொன்னாகிப் பொலியப் பிரவகித்துக் கொடிய நோய்களையும், பலபாவங்களையும் தன்னில் மூழ்கினோர்க்கு நீக்கிக் "காஞ்சிமாநதி" எனக்காரணப்பெயர் கொண்டு கிழக்குநோக்கிப் பேரூரடைந்து அங்கு எலும்பைக் கல்லுருவாக்கி, கோயமுத்தூர் வழியே கீழ்த்திசைநோக்கிப் பலகாததூரம் பாந்துசென்று, கொடுமுடிகடந்து கருவூருக்கருகில் காவிரிநதியுடன் கலக்கின்றது.

இந்நதியின் பெருமையைப்பற்றிப் பேரூர்ப்புராண ஆசிரியர் ஸ்ரீ கச்சியப்பமுனிவரும், பேரூர் மும்மணிக்கோவை ஆசிரியர் மகாவித்வான் கந்தசாமி முதலியாரவர்களும் புகழ்ந்து பாராட்டியுள்ளதைத் தமிழன்பர்கள் உணரும்பொருட்டு இதன்கீழ்த் தருகின்றோம். அவை வருமாறு:—

" ஆதலா னமது மெய்யே யாகிய கிரிவலப்பாற்
காதடியு ரோமமான காமரு வன்னிமூலத்
தேதமெவ்வுல குந்தீர வெழுந்து சென்றெழுகு கென்றுன்
நீதற வுரைத்தார் கவ்வா றெழுந்தது தெய்வகங்கை " (14)

(தீர்த்தப்படலம்)

" வேக னான்றகு மணியும் வேழமருப் பினமணியுங்
காரகிலுஞ் சந்தனமுங் கையரிக் கொண்டலை யெறிந்து
பேராவத் தொடுபெயரும் பேரூர்வைப் பிடைக் காஞ்சித்
தீரமெதிர் கண்டிறைஞ்சிச் செழும்புனல் புக்காடினர் " (8)

(அழகிய சிற்றம்பலப்படலம்)

" கதிர்மணிக் குலமும் பொன்னும் கையரிக் கொண்டுபோந்து
மதிர்புனல் வழக்கறாத வற்புதக் காஞ்சி " (58)

(நாரதன் வழிபடு படலம்)

" நலம்பெறு குறுமுனி நிலம்படர்ந் தன்று
சையத் திழிந்து வையமேற் படர்தரு
பொன்னி யென்னும் பொறுவறு நன்னதி
சென்னி நாட்டிற் சேர்வதன் முன்னர்ப்
பன்னாட் டினிலுந் துன்னுற்றினை யெலாம்
வென்றுதன் கீழ்ப் படுத்தின்றுயர் கொங்கிலும்
வந்தனளெனச் சிலர்முந்திவர் துரைசெயக்
கொங்கு நாட்டிற்கோர் பங்கமிதா மெனக்
காஞ்சி சூழ்மருப்புக் காஞ்சி நன்னதிதான்
விடையுடைப் பகவன் சடையினை நிகர்த்த
பச்சிம வெண்குவ டுச்சியின் றிழிந்து
போதிவனத் தரன்பாதம் பணிந்து
திருவருள் கைகொடு வருபொழு தெதிர்ந்த
பொன்னியை நோக்கி யென்னிவ ணுற்றனை
யெனைப் போலீசன் றனைப் பூசித்தலை
வெள்ளியங் குன்றிடையுள்ள நீயோ வலை
பாசக் கானம் பரிசித்தா யலை
விபுதல கோர்க்குப் பயனளித் தாயிலை
யென்புறு பாவிதன் றுன்பொழித் தாயிலை
யகமலி சோழன் முகமளித் தாயிலை
காத்திற் றெங்கினை காகத் தடங்கினை
காக்கைகா லுள்ளித் தாக்க வலேந்தனை
சத்தியங் தவறி யித்தலத் தடைந்தனை

கொண்டோன் றயாக் கண்டோட் டெடுத்தனை
நீயோ கொக்கெனுந் தூய நிலத்தடைகுவை
யென்னப் பொருதுழிப் பொன்னி நாணெய்தி
யாண்மை விடுத்துக் கேண்மை கொண்டளவ ளாய்க்
கொங்கிற் புகாது தங்கு சோணாட் டிடைச்
சென்று பலதல நன்று வணங்கியும்
பற்பல பயிரையும் பிற்பட வளித்துந்
திருமலி காஞ்சியைப் பொருவ லாமையினாற்
சித்துரு வெடுத்தொளித் திற்றனள் புணரியைப்
பாவுறு காஞ்சி வாநதி யாயிடைப்
பொன்னியை நொய்தாய் வெந்நிடக் காண்டலின்
வையக மின்னு நொய்ய லென்றேநிடு
மவ்விடை தணந்து செவ்விதிற் போந்து
விரிபுகழ்ப் பேரூர் பிரியா தமர்ந்தெனத்
திகழ்தரு காஞ்சி மகிழ்தரு கரை"

(மும்மணிக்கோவை)

மற்றும், தலபுராணம் இந்நதியை நொய்யல், சிலாநதி, அமிர்தவுந்தி, தக்ஷிண கங்கை, ஆதிகங்கை, ஞானதோயை, பிப்பிலநதி, பிறவாநெறி, கலிகன்மநாசினி, விருத்தகங்கை, பிரயாகை எனக் கூறுகின்றது. நொய்யல் என்பதற்கு நோயைப்போக்கவல்லதென்பது பொருள்.

சிலாநதி தன்னில் அமிழ்ந்த எந்த வஸ்துவையும் கல்லாகச்செய்யும் சக்திவாய்ந்தது. இந்நதி வெள்ளிமலையிலுள்ள ஜோதிவிருக்ஷத்தைச் சுற்றிப்பாய்ந்து வெளியேறுவதால் இதற்கு அச்சக்திவாய்ந்ததெனக் கூறுவர்.

இப்புனிதநதியில் மூழ்கிய முசுகுந்தனுக்குக் குரங்குமுகம் நீங்கியதும், கரிகாற் சோழனுக்குக் கொலைப்பழிதவிர்ந்ததும், குலசேகரனுக்குக் குஷ்டநோய் தீர்ந்ததும் யாவரும் அறிந்ததே. இத்தீர்த்தத் துறைக்கு "சோழன் படித்துறை" என்று இன்றும் பெயர்வழங்கிவருவதினாலேயே, இவ்வுண்மை உறுதிப்படும். "முன்றுறை" என்பது இதற்கு மற்றொரு பெயர்.

பிரம்மதீர்த்தம்:—இது வடகயிலாயம் எனப்படும் கோயிலுள்ளிருக்கிறது. தீர்த்தம் கிணறு வடிவிலிருக்கிறது. இதில் ஒருமண்டலம் ஸ்நானம் செய்தவர்கள் மனோபீஷ்டம் நிறைவேறுவதும், பெண்கள் மலடுநீங்கப்பெறுவதும், பேய்முதலிய பிணிகளும், அஷ்டதேவதை விலகுவதும் பிரத்யக்ஷம்.

காலவதீர்த்தம்:—இது அரசம்பலவாணர் ஆலயத்தின் மேற்றிசையிலுள்ளது. இதுவும் கிணற்றுவடிவமே. இதில் நீராடியவர் பிறவிப்பேறு பெறுவதுடன், முடிவில்லாத இன்பத்தையும் அடைவர்.

சிங்கமுகதீர்த்தம்:—இது பட்டிப்பெருமான் ஆலயத்தின் முன் மண்டபத்தின் வடபுறத்திலுள்ளது. இதில் ஸ்நானம் செய்தோர் தரித்திரம் நீங்கித் தனத்தைப்பெற்று இன்புறுவர்.

சக்கரதீர்த்தம்:—இது தெற்கிலுள்ள தென்கயிலாயம் என்னும் சிற்றாலயத்தின் வடபுறத்தில் கிணற்று வடிவத்திலிருக்கிறது. இதில் மூழ்கினோர் இஷ்டசித்தியையும், இன்பப்பேற்றினையும் இனிதடைந்து மகிழ்வர்.

பாலதீர்த்தம்.— இது ஊருக்கு மேற்கில் "காங்கேய சமுத்திரம்" என்ற ஏரிக்கரைக்கு அருகில் இருக்கிறது. இதில் மூழ்கினோர் நரை, திரை, மூப்புக்கள் நீங்கி இன்பத்தையெய்துவர்.

திருக்குளம்:—இது ஸ்நாநபானத்திற்கு யோக்யமின்றிப் பாசிபடிந்து நிரம்பக் கேவல தசையிலிருக்கிறது.

## ஸ்தலவிருக்ஷங்களும்—விம்மிதங்களும்.

——"பூஞ்சினைசேர்
திந்திரிணியும் பனையுஞ் சென்மமிலை யிங்கடைந்தோர்க்
கந்தமிலை யென்பதனுக் கத்தாக்ஷி—யிந்தநக
ரானின் மயங்கிருமி யாதியடையா தென்னிற்
பாவ நிரயத்தின் பயமுண்டோ." (பின்னைவினோதம்)

பேரூர் பிறவாநெறித்தலம் என்பதற்குச் சான்றாக இத்தலத்தில், 'பிறவாப்புளி' 'இறவாப்பனை' என்ற இரண்டு தருக்கள் விளங்குகின்றன. இவைகள் நெடுங்காலமாக எங்கட்கு இறப்பும்-பிறப்பும் இல்லையென்பதை மெய்ப்பிக்கும் சாட்சிகள்போல் காட்சிப் பிரமாணமாக நிற்கின்றன. இவ்விரு தருக்களையும் பற்றித் தலபுராணம் 'தலவிசேடப் படலம்,' 'விம்மிதப்படலங்கள்' பலபடப்பாராட்டிக் கூறுகின்றன. அவை:—

"அறவாணர்கள் போற்றிடும் பேரூரழியா வெமக்கோரிடமாகி
யுறவா மதனு லெமைப்போல வுலவா வதனுக் கொருசான்றங்
கிறவாப் பனையொன் றுள தன்றியின் னுமநேக விம்மிதங்கள்
சிறவா நின்றவதற் கொப்புச் செப்பினெமக்கு மொப்புளதாம்"
(த. வி. படலம் 9)

"வடகயிலைச்சூழ லிறவாப்பனையும் பிறவா
வாய்மையுறு புளியுமுள விறவாது பிறவா" (விம்—படலம். !4)

என்பனவாம்.

இச்செய்யுட்களுக்கேற்பவே, இத்தருக்கள் வயதினாலும், பழைமையினாலும் மூத்ததாகவே காணப்படுகின்றன. வயதேறிய பலரும், இவைகள் பழைமை பெற்றதென்றும் காலவரம்புக்குட்படாததென்றும் கழறுகின்றனர். இவ்விரு பாதவங்களில் 'பனை' வடகயிலாயம் என்னும் சிற்றாலய முற்றத்திலும், 'புளி' அரசமரத்து மேடைக்கு நேர்மேற்கு

10 கஜ ஆரத்திலும் இருக்கின்றன. யாத்திரை வாசிகள் எளிதில் அறியும்பொருட்டுத் தற்கால ஏற்பாடாக அம்மரங்கள் நிற்கும் இடங்களில் விளம்பரப்பலகை போடப்பட்டிருக்கின்றன. இவ்வதிசயத் தருக்களைப்பற்றி ஆன்றோர் அடியில் வருமாறு கூறுகின்றனர். அவை :—

(1) பிறவாப்புளி :— இது பிறக்குந்தன்மையின்றிப் பேறுபெற்று வயது முதிர்ந்து அதிசயம் விளக்கும் அரிய விருக்ஷம். இவ்விருக்ஷம் மற்ற விருக்ஷங்களைப்போல் பூத்துக் காய்க்குந்தன்மையினவாயினும், இதின் வித்து முளைப்பதாயில்லை. பலர் இதனைப் பரீட்சித்து உண்மைகண்டறிசயித்துள்ளார். மலட்டுத்தன்மைவாய்ந்த பெண்கள், தங்கள் சாபத்தை நிவர்த்தித்துக் கொள்வதன்பொருட்டு அம்மரத்தடியிற் சென்று தங்குவதாகவும், அதன் பயனாக அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகள் பூர்ண ஆயுளுடன் பிணியாதியனவின்றி ஆரோக்கியமாக வாழ்ந்து முடிவில் முத்திவீடடைவதாகவும் ;

(2) இறவாப்பனை :— இப்பனை எப்பொழுதும் அழியாது வளரும் சிறப்புடையது. இதுவும் வயதேறிப் பழைமைபெற்றதே. மற்ற பனைகளைப்போலவே இதுவும் காணப்படுகிறது. ஆயின், தசை சம்பந்தமான வியாதிகளைப் போக்குவதில் இது சிறந்ததென்று கண்டறிந்த பலர், இதன் மேற்பட்டையை அவுஷதமாக உபயோகித்து நன்மையடைவதாகவும் அறியப்படுவனவாம். இஃதன்றி, இத்தலத்தின்கண் பசுவின் சாணத்தில் புழுக்கள் விழுவதில்லையென்று தலபுராணங்கூறுகின்றது. அது,

“காப்பினு லுலகத் துக்கரி செலா
மோப்பி நேமியு ருட்டுஞ் செங்கோலினு
யாப்பியிற் புழுவர்க்க முறுது காண்
மாப்பெருந் தலமா மவ்வரைப் பிடை”
(குலசேகரன் குட்டநோய் தீர்ந்தபடலம்)

எனவருவதாம். அனுபவமும் அப்படியே இருப்பதாகக் கூறுகின்றனர். இவ்வதிசயங்களால், இவ்விடத்திய பூமியின் லாபம் விசேஷ பெருமையுடையதெனத் தெரிகிறது. மற்றும், இப்பேரூர்க் காஞ்சிமாநதிக்கு, எலும்பைக் கல்லுருவாக்குந் தன்மையிருப்பதாகவும் கூறப்படுகிறது. இதுபற்றியே இதற்குச் “சிலாநதி” யென்று வழங்கப்பட்டதுபோலும். பாவம் போக்கிப் புண்யம் எய்துவிக்கும் இப்புனிதநதியில், ஆடி அமாவாசை, புரட்டாசி அமாவாசை, அற்பிசித் துலாமுழுக்கு ஆகிய விசேடநாட்களில், பற்பல இடங்களினின்றும் ஸ்நானநிமித்தம் 1000–கணக்கான யாத்திரைக்காரர்கள் வந்து முழுகியும், இறந்தோர் எலும்பைக் கொணர்ந்து ஆற்றிலிட்டுக் கருமாதி புரிந்தும் செல்லுகின்றனர். இவர்களில் பெரும்பாலோர் மலையாளிகள்.

——“கோத்திரத்தில்
எள்ளாற் றருப்பணஞ்செய் திட்டோர் பெறும்பேற்றை
வெள்ளெலும்புங் கல்லாய் விளம்புங் காண்” (504)
(திருப்பேரூர்க் கின்னவிதோது)




## ஸ்ரீ சுந்தரமூர்த்திகள்
## பேரூர் வருகையும்—பட்டிப்பெருமான் பள்ளவடிவும்

மேலச்சிதம்பரம், பிறவாநெறி, ஆதிபுரி ஆதிய திருப்பெயர்களும் பெற்றுப் பொன்கொழிக்கும் காஞ்சிமாநதியைத் தன்னகத்தேகொண்ட திருப்பேரூர் என்னும் திருத்தலத்தை யடைந்து, பிறவாநெறியளிக்கும் பெருமானைத்தொழுது, பாடிப்பரவ பெருவிருப்பங்கொண்ட தம்பிரான்றோழராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள், திருமுருகன் பூண்டி, திருப்புக்கொளியூர், அவிநாசி, திருத்துடிசை, (துடியலூர்) முதலிய கொங்கு நாட்டுத்திருப்பதிகளை முறையே தரிசனஞ்செய்து, வணங்கியபின் பேரூரடைந்தனர். இங்ஙனம் இவர் பேரூர் அடைந்தனரென்பது,

"உலகெலா முய்ய வுறுதியாம் பதிக முரைத்து
மெய்யுணர் வரு வொருமை
நிலவிய சிந்தையுடன் றிருவருளா
னீங்குவார் பாங்கு நற்பதிகள்
பலவு முன்பணிந்து பாமர்தாள் போற்றிப் போந்து
தண்பனி மலர்ப் படப்பை
குலவுமிக் கொங்கிற் காஞ்சிவாய்ப் பேரூர்
குறுகினர் முறுகு மாதரவால்"

(பெரியபு—ஏயர்கோ—க. நா. வரலாறு—88)

என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கால் அறியப்படுகிறது. இங்ஙனம் பேரூர் அடைந்த அடிகள், நீராடி நியமமுற்றிப் பெருமானைத் தரிசிக்க ஆலயத்துட் சென்றனர். ஆங்கு இறைவரைக் கண்டிலர். இறைவரோ ஒரு திருவிளையாடல் இயற்றநினைந்து, உயர்ந்ததும், இழிந்ததும் ஆன வெல்லாம் தாமே என்று மறைமொழிவதை மெய்ப்பிக்க, முன்னர் வேதியனாய் வந்ததுபோல, இப்போதும் தாமே தமது தேவியரோடும், ஆனைமுகன் ஆறுமுகன் ஆகிய இரு புதல்வர்களுடனும், பேரூரின் தென்புறத்துள்ள வயலொன்றில் தாம் * பள்ளனாகவும், பச்சைநாயகியார் பள்ளியாகவும், சிவகணத்தலைவர் பள்ளராகவும் அமைய, ஒருபுறம் உழுவதும், ஒருபுறம் நீர்ப்பாய்த்துவதும் ஆக வயற்றொழில் பலவற்

---

* இவ்வுண்மை—,

——"பேரூர்ப்
பண்ணை நோக்கிடு வான் பள்ளனும் வடிவொடு
மெண்ணியே யேருழுதொழி லடாத்துபு ரோக்கியும்
அமையாக் காதலோ டுமையா டன்னையும்
எள்ளலிலாத பள்ளியாய் வரிதீஇ
வயலிடை நடவு பயிலப் பற்றிடிற்
பேரூர்ப் பண்ணையின் சீர்சொலற் பாற்றே"

(மும்மணிக்கோவை)

என்பதனுல் அறியப்படும்.

றையும் நடத்தவித்திருந்தனர். பொன்னாசி, நாவின்கிழத்தி, இந்திராணி முதலிய தேவியர் பள்ளிகளாய், மரகதவல்லியாம் பச்சைப்பள்ளியின் சொல்வழிக்கழனியில் நாற்று நட்டனர். இவர்கள் இவ்வாறிருக்க, கோயிலுள், எம்பெருமானைக் காணது திகைத்த ஆரூரடிகள், ஆண்டிருந்த இடபதேவரை, இறைவர் எங்குற்றனர் என வினவினர். தாம் சென்றவிடத்தை வன்றொண்டருக்கு வழங்காதே என ஆண்டவர் ஆணையிட்டிருந்தபடியால், இடபதேவர் ஆண்டவர் அருட்கட்டளைக்குப் பங்கம்வாராமலும், அடியார் விரோதம் ஏற்படாமலும் இருக்கும்பொருட்டுத் தாம் வாய்திறவாது கண்களால், கடவுள் இருக்குமிடத்தைக் குறிப்பிட்டனர். அக்குறிப்பின்வழியே சுந்தரர் வயலிடம்சேர்ந்து—

“வேத நாடரிய விழுப்பெரும் பொருளாய்
விளங்கிய பட்டி நாயகருஞ்
சீதவாண் முகத்து மரகத மயிலுந்
தேவர் பூதர்கள் புடை நெருங்கப்
பாத தாமரைகள் சேதகத் தலரப்
பயிரிடு விழாவினைத் தொண்டர்
காதன்மீக் கூறச் சேயிடை நோக்கிக்
களிப்பொடு மெதிர்பணிந் தெழுந்தார்”

(பேரூர்ப்புராணம்)

இங்ஙனம் பாடிப்பணிந்தெழுந்த அன்பின் அடிகளைப் பட்டிப்பெருமான் பார்த்தும் பாராதவர்போலத் தமது செய்தொழிலிலேயே சிந்தை மேற்கொண்டிருந்தனர். அது கண்ட ஆரூர்ப்பண்ணவன், பள்ளவடிவுகொண்ட பரமனைநோக்கி, “ஐயனே! முன்னர் என்பொருட்டுக் குலத்திற்சிறந்த வேதியனாகவந்து விளையாடினை, அரசனாக மதுரைமாநகரில் அரசுபுரிந்தனை, செட்டியாக வளையல் விற்றனை, சூத்திரனாக விறகுவிற்றனை, வலைஞனாகத் தேவியை வேட்டனை, உமது சங்கரன் என்னும் பெயரே சங்கரஜாதியைக்குறிக்கும், விஜயன் (அர்ச்சுனன்) பொருட்டு வேடனாயினை, யாவரும்பணிய நிற்றலாலும், பாம்பை அணிந்துள்ள காரணத்தாலும், பணிசிவனாயினை, முக்கண்பெற்ற நக்கனாதலின் முக்கணக்கனாயினை, அகத்தே பரிசுத்த சொரூபியாதலின் அம்பட்டனாயினை, புறத்தே முப்பாழும்பாழாய் முடிவிலொரு சூனியமாய் வெட்டவெளியாய்க் காலியாய் அரூபியாய் நிற்றலின் புறத் தேகாலியாயினை, பாம்பை இடையிலணிந்த காரணத்தால், அரவமாரிடையனாயினை, சோமாசி மாறனார்பொருட்டுப் பறையனாயினை, இன்று என்பொருட்டுப் பள்ளனுமாயினை, என்னே! உமது திருவிளையாட்டு” என்று அசதியாடினர். இக் கருத்துக்குச் செய்யுள்,

“மறையவ னரசன் செட்டி தன்றுதை
வயக்குழாற் சூத்திரன் புவனம்
பறைதரு நல்ல சங்கரன் வேடன்
பணிசிவன் விளக்குமுக் கணக்கன்

அறை செய்யம்பட்ட னமெது புறத்தே
காளியாட் டாவ மாரிடையன்
பறையனு முன்னரான நீ யின்று
பள்ளனுனமை தெரிந்தேன் யான்" 35
(பேரூர்ப்புராணம் பள்ளுப்படலம்)

"அல்லாமல், உமது மூத்தபிள்ளையோ, எண்ணிய பொருளெலாம் எளிதில் முற்றுறக்கூட்டுவிக்கும் யானைமுகப்பிள்ளை, இளையபிள்ளையோ, நிறைசெல்வச் செட்டியார், மனைவியோ அன்னபூரணி, நண்பனோ குபேரன், இவ்வாறெல்லா மிருக்க யார்பொருட்டு நீர் வருந்தி வயலிடத்துழுவது? அராப்பள்ளியார்க்கருளும் அப்பனே! அகத்தியான பள்ளிமேவிய அண்ணலே! சக்கரப்பள்ளி மேவியசாமியே! திருசிராப்பள்ளி அமர்ந்த தேவனே! மயேந்திரப்பள்ளி மாட்டமர்ந்த மகேசுவரா! திருநனிப்பள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருக்காட்டுப்பள்ளி யென்னும் தலங்கள்மீதுள்ள காதலோ உம்மைப்பள்ளியாகத் திருவுருக்கொண்டு விளையாடச்செய்தது?" என உரையாடினர். இவைகேட்ட எம்பெருமான், ஏது இவன் நம்மைவிட்டகலான் போலுமென்றெண்ணி வயற்றொழில் விடுத்துத் திருக்கோயிலுள், மண்டிய போன்பால் அடிமைகொண்டதால், வன்றொண்டர் எனப்பெயர்சிறந்த தம்பிரானோடு எழுந்தருளினர். அங்ஙனம் எழுந்தருளிய ஆடல்வல்லபிரான், பாடல்வல்ல பண்பினரான சுந்தரர் பண்ணிற்குப் பரிசாகத் தில்லைச்செம்பொன் னம்பலத்து நடிக்கும் திருநடனத்தைப் பேரூர் வெள்ளியம்பலத்து இனிது நடித்தனர்*. காண்டற்கரிய அக்காட்சியைக் கண்பெற்ற பயனாகக் கண்டதிசயித்த ஆரூர்த்தொண்டர், கைகூப்பிக் கண்ணீர்வாரத் தொழுது, எல்லையற்ற இன்ப வெள்ளத்துள் ஆழ்ந்தனர். இது,

" * * * * * *
சித்தனர் தில்லை மன்றுணின் றாடீடிய
கோல நேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்களா னந்தக்
கலுழநீர் பொழிதாக் கண்டார்" 89

என்ற பெரியபுராணம் ஏயர்கோன்கலிக்காமர் வாலாற்றுச் செய்யுளால் அறியப்படும்.

பின்னர், சுந்தரமூர்த்திகள், பேரூர்ப்பெருமானை அன்புறவணங்கி ஆவணங்காட்டி ஆட்கொண்ட அப்பனே! ஒப்பிலாமணியே! இத்தலத்து எனக்குப் பொன்னளித்திடுதி என்றனர். அதுகேட்ட பட்டிநாயகர், "அன்பனே! உனது பாட்டிற்கு எமது ஆடலே பெரும்பரிசு, இது, முத்தித்தலம் ஆனதால், இங்கு பொன்தரோம், உனக்கு

*"அதிசய வளஞ்சேர் பதிபல வற்றினுந்
தலைமை யடைந்தயர் நிலைமையுடைத்தா
மாரூரண்ணற் கருநடங் காட்டிய
பேரூரமர்தரு பிறை முடிப்பெரும!"
என்ற பேரூர் மும்மணிக்கோவையால் நடனங்காட்டிய உண்மை தெளியப்படும்.

பொன்தருமாறு சோமான்பெருமானுக்கு ஆணையிட்டுளோம். அவன்பாற் சென்று பெறுக" என்றருளினர்.

பாடிய புலவனுக்குப் பரிசுதரப் பொன் இன்மையால், பேரூர்ப் பட்டிப்பெருமான் பள்ளவேடம் கொண்டனரெனக் கொங்குமண்டலசதகம் 18-ஆம் செய்யுள் கூறுவது கொண்டு மேற்கூறிய செய்தி வலியுறுகின்றது. அது:—

“ கடுவாள் விழியிணை யாரூர்ப் பாவை கலிவிலைப்
படுவார் தமிழ்ச்சுக் தார்பாடற் கேயப் பரிசின்மையால்
நெடுவாளை பாயும் வயலூடு போகி நெடியபள்ள
வடிவாகி நின்றதும் பேரூர்ச் சிவன்கொங்கு மண்டலமே ”

என வருவதாம்.

இதன்பின்னர், ஆரூர்ப்பாவையின் அருக்கணவர், கொங்குநாடுநீங்கிக் கான்யாறு களையும், கற்சுரங்களையும், நெடுங் கானகங்களையும் கடந்து, சிவனூர் கோயில்கொண்டரு ளும் திருத்தலங்கள்தோறுஞ் சென்று தரிசித்துப் பாடிப்பணிந்து,

“ காத்தால் தொழுதிடினுங் கண்டிறைஞ்சி னாலுஞ்
சேர்த்தால் வணக்கஞ் செயினும்—உரைத்திடினும்
தில்லைக்கப் பால்நின்று சேவித்தாலுஞ் சனனம்
எல்லைக்கப் பால்நிற்கு மே ”

என்ற பெருமைபெற்ற திருத்தில்லை சேர்ந்தனர். அன்னம் சேர்ந்த சங்கிலி கேழ்வர், தில்லைமன்றுள் திருநடம்புரியும் சிற்றம்பலவனைத் தரிசித்தனர். அத்தரிசனக் காட்சி, கொங்குநாட்டுப் பேரூரில் கண்ட நடனக்காட்சிபோ லிருந்ததுகண் டதிசயித்தவ ராய் அகமிகமகிழ்ந்து "மடித்தாடும்" என்ற தொடக்கத்துக் கோயில் தேவாரத்துள்,

“ பாரூரு மாவல்கு லுமைநங்கை யவள்பங்கன்
பைங்க ணேற்றன்
ஊரூரன் றருமனார் தமர்செக்கி லிடும்போது
தடுத்தாட் கொள்வான்
ஆரூரன் றம்பிரா னாரூரன் மீகொங்கி
லணி காஞ்சி வாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச்சிற்
றம்பலத்தே பெற்றாமன்றே ”

என்று பாடினர். இவ்வுண்மை பேரூர்ப்புராணம் 'பள்ளுப்படலத்' தினும் காணப்படு கின்றது. அப்பாடல்கள் வருமாறு:—

“ அப்பதி வழுத்தித் தில்லை மூதூரை யடுத்தரு ணடங்கண்டு தொழுவா
ரெப்பொ ருளாயு மிருந்தரு ளிறைவ ரெதிதிரைக் காஞ்சிவாய்ப் பேரு
ரொப்பறு வெள்ளிமன் றிடைத் தெரித்தவுரு சுவையானந்த நடனந்
தப்புறக் காட்ட விம்மித மெய்தித் தழும்புகண்ணீருா நனைப்ப ” (54)

"சீரா மடித்தாடு மென விடுத்து விளம்பு திருப்பதிகந் தன்னுட்
பேரூர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாமென்று
பாரூர் பலவற் றுள்ளும் பேரூரே யிறைக்குரிய பதியாமாறு
காருரு முளத்திநூற் சிறப்பித்துப் பாடினார் நாவலூரர்" (55)

தம்பிரான்றோழராகிய சுந்தரர், தாம் ஆங்காங்குக் கண்டதைக் கண்டாங்கு தமது திருத்தேவாரத்தில் பாடுவது தமது வழக்கமாதலால், அவ்வழக்கத்தை யொட்டியே பேரூர்ப் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே கண்டபொழுது அக்காட்சியைக் கருங்கன் மனத்தையும் உருக்கும் தமது தேவாரப்பதிகத்தில் இனிமைபெற வைத்தோதி மகிழ்ந்தனராவர்.

மேற்கூறிய வரலாறு சுமார் இருநூறு ஆண்டுகளுக்குமுன், திருவாவடுதுறை ஆதீனத்துத் தமிழ்ப் பெரும்புலவராய்ப் புகழ்பெருகத் திகழ்ந்த திரு கச்சியப்பமுனிவர் பாடிய பேரூர்ப்புராணத்துப் பள்ளுப்படலத்தே காணப்படுகின்றதன்றி சேக்கிழார் அருளிய பெரியபுராணத்தில் காணப்படவில்லை. பெரியபுராணம், ஸ்ரீ சுந்தரமூர்த்திநாயனாரது வரலாறு கூறவந்த பொது நூலேயன்றி, சிறப்பாக ஆங்காங்கு நடந்த சிலதலங்களின் சிறு சம்பவங்களையும் கூறவந்ததன்று. தலத்துநிகழும் சம்பவம் மிகவும் அதிசயமாயிருப்பின், அது அத்தலபுராணத்து விரிவாக இடம்பெறுதல் அவசியமேயன்றித் தொண்டர் புராணத்தில் கூற நியாயமில்லை.

கச்சியப்பமுனிவர் காலத்துக்குச் சற்று முன்னே அல்லது பழமையாகவோ, பேரூரில் நடைபெற்றுவந்த "நாற்றுநடவு" உற்சவத்தை முனிவர் பேரூர் எய்தித்தங்கியிருந்தபோது, இவ்விழாவைத் தாமே நேரிற்கண்டு மேற்குறித்த வரலாற்றைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைப்பற்றிப் பெரியபுராணத்துட்கண்ட மற்றைய வரலாறுகளுடன் இதனையும் உடன்சேர்த்துப் "பள்ளுப்படலம்" என்று பெயர்சூட்டி 66 திருவிருத்தங்களில் பாடிப் புராணத்தில் சேர்த்திருக்கவேண்டுமென ஊகித்தலே பொருந்துமெனக் கருதுகின்றோம்.

பேரூர்ப்புராணம் வடமொழியிலிருந்து தென்மொழியாகிய தமிழில் மொழிபெயர்க்கப்பட்டதெனின், இச்செய்தி வடமொழிநூலில் உளதா? உளதாயின், எக்காலத்து ஏற்பட்டது, என்ற வினக்கள் தோன்றும். அது ஆராயற்பாலன.

யாவருக்கும் இறைவனாகிய எம்பெருமானை, வேதாகமங்கள் உலகில் உயர்ந்ததும், இழிந்ததும் அவரே எனக் கூறுவதால், அதனை மெய்ப்பித்துக்காட்டத் திருவுளங்கொண்ட பட்டிப்பெருமான், பள்ளவேடம்புனைந்து செயல்புரிந்தார் எனப் பேரூர்ப்புராணம் புகலுகின்றபடி, சிவபெருமானின் அனந்தகல்யாணகுணங்களில் இதுவும் ஒன்றென அறிவிதற்பொருட்டே அக்காலத்தில் பேரூரில்வாழ்ந்த பெரியாரிற்சிலர், இச்சம்பவத்தை உறுதிப்படுத்த ஒரு திருவிழாவாக நிகழ்த்தி அதனை நடைபெறுமாறு செய்தாரெனக் கொள்ளினும் பொருந்தும்.

நமது தமிழ்நாட்டில், பூர்வம் நிலத்தை உழுது, பண்படுத்தி, நீர்வார்த்து, விதை

தெளித்துப் பயிரிடுங்காரியத்தை அவ்வக்காலம் பருவத்திற்கேற்பச் சிறப்பித்துத் தெய்வத்தை அலங்கரித்துத் திருவிழாக்கொண்டாடுவது பெரியாரது வழக்கம். நமது பண்டைப்பெரியார் தொடங்குகின்ற எந்தக்காரியத்திற்கும் தெய்வத்தையேனும், அவரை வணங்கும் ஒரு பெரியோரையேனும் முதன்மையாகக்கொண்டு, அக்காரியத்தைச் சிறப்பாகத் தொடங்குவதும், முடிப்பதும் பதிவு. அப்பதிவையொட்டியே இக்காற்று நடவு உற்சவத்தைப் பூமி செழித்து நெல்லோங்கிப் பயன்தருவதற்குத் தொடங்கி இருக்கலாமெனக் கருதினும் தவறில்லை. நிற்க.

பட்டிப்பெருமான், ஆலயத்தைஅடைந்து இடபதேவதைமுனிந்து, தமது ஆணைக்குமாறாக நடந்த குற்றத்திற்காக அவரது முகத்தைத் தமது கையிலிருந்த மண்வெட்டியால் சேதிக்க, இடபதேவர் அஞ்சி, குற்றத்தை மன்னித்தருளுமாறு சிவபிரானைக்குறையிரந்து வேண்டி, கொம்பினால் ஒரு தீர்த்தம் அகழ்ந்து, சிவலிங்கந்தாபித்துப் பூசித்து முன்போல் முகம்பெற்றனர் என்பது வரலாறு. இப்பொழுதும் பட்டிப்பெருமான் ஆலயத்தின் துவஜஸ்தம்பத்தின் கீழுள்ள நந்திக்கு, முகம் சேதிக்கப்பட்டிருப்பது காணலாம். இதற்குப் பேரூர்ப்புராணத்திலும், கொங்குமண்டல சதகத்திலும் ஆதாரங்கள் காணப்படுகின்றன அவை அடியில்வருமாறு:—

"பண்ணையி லேரில் பூட்டிப் பகட்டொடு முழாது வைத்தால்
நண்ணிய தொண்டர்க் குண்மை நகிற்றுருறு திருப்பை கொல்லென்
றண்ணல்வெள் விடையைச் சிறி யானனஞ் சரித்துவீழ
மண்ணகல் கருவிதன்னால் வள்ளலார் துணித்திட் டாரால்"
(பேரூர்ப்புராணம்)

"நறைவயல் வாய்ச்சுந் தார்க் கொளித் தாரதை நந்திசொல்லப்
பிறைமுடி வேணியர் பட்டீச் சார்பெரு மண்வெட்டியாற்
குறைபட வெட்டி விழுமுக நந்திசெய் கொள்கையினால்
மறுமுக மீண்டு வளர்ந்தது வுங்கொங்கு மண்டலமே". 19
(கொங்குமண்டலசதகம்)

## கோயிலும்—சிற்பங்களும்.

கோயிலென்பது ஆண்டவன், சகளத்திருமேனிகொண்டு ஆன்மாக்கள் வழிபட்டுய்யும் பொருட்டு, இனிதமர்ந்துறையும் நல்லிடம். இச்சகளத்திருமேனியை வழிபடும் நிலையை ஆன்றோர் உருவழிபாடெனக் கூறுவர். அலைகின்ற மனத்தை ஒருவழிப்படுத்தற்கு இவ்வழிபாடு இன்றியமையாததாம். இவ்வழிபாட்டால் உள்ளத்தில் உறுதியும், தூய்மையும், அரும்பொருளுணரும் ஆற்றலும் உண்டாம். இத்தகைய ஆற்றலை அளித்தருளும் ஆண்டவன், உருவத்திருமேனியைச் சிவனெனக்கருதி வழிபடல் வேண்டும். அங்ஙனம் வழிபடுவார்க்குச் சிவபெருமான் அருட்குறியினின்றும் தோன்றி ஆருள் பாலிப்பர். இவ்வுண்மைக்குச் சிவஞானசித்தியில் ஆதாரங் கூறப்பட்டிருக்கிறது. அது,

" திருக்கோயி லுள்ளிருக் குந்திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவ
உருக்கோலி மந்திரத்தா லெங்ஙனேயு மவர்க்கு
முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்கரும்
இருப்பாய வடிவாகி யிந்தனத்தி னெரிபோன்
மந்திரத்தின் வந்துதித்தே யருஞ்சாபிக் கெக்கும்
உருக்காண வொண்ணாத பான்முலைப் பால்விம்மி
பொழுகுவது போல்வெளிப்பட் டருளுவ னன்பர்க்கே"

எனவருவதாம். இவ்வழிபாட்டுடன் நெஞ்சைப் பின்னும் நிலைபெறச் செய்தற்குச் சில கிரியைகளும் செய்தல்வேண்டும். அவை:—

" நிலை பெறுமாறெண் ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில்புக்குப்
புலாவதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலைபாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்
சங்கரா சயபோற்றி போற்றியென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை யெம்மா தியென்றும்
ஆரூரா வென்றென் றேயலறு நில்லே"

(அப்பர் தேவாரம்)

" ஆமாறுன் திருவடிக்கே யகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வேனே"

" எய்ந்தமா மலரிட்டு முட்டாததோர் இயல்பொடும் வணங்காதே
சாந்த மார்முலைத் தையல் நல்லாரொடுந் தலைதடுமாறாகிப்
போந்தியான் றுயர் புகாவண மருள்செய்து பொற்கழலிணை காட்டி
வேந்தனுய் வெளியே என்மு னின்றதோ ரற்புதம் விளம்பேனே"

" நினையப் பிறருக்கரிய நெருப்பை நீரைக்காலை
நிலனை விசும்பைத்
தனையொப் பாரையில்லாத் தனியை நோக்கித்
தழைத்துத் தழுத்த கண்டங்
கனையக் கண்ணீர் அருவிபாயக் கைகூப்பிக்
கடிமலராற்
புனையப் பெறுவதென்று கொல்லோ! என்
பொல்லா மணியைப் புணர்ந்தே"

எனவருவனவாம்.

பஞ்சபூதப் பெருவடிவையே மூதன் முதல், மனிதன், உன்ன இயலாததெனக் கருதி நம்முன்னோர்கள், பஞ்சபூத நுட்பத்தைக் கோயில்கள் வாயிலாக விளங்கவைத்துச் சென்றார்கள். பஞ்சபூதம் ஆண்டவன் வடிவம் என்பதை அறிவுறுத்த நமது தமிழ் நாட்டிலேயே ஐந்து திருப்பதிகளுண்டு. அவை காஞ்சிபுரம், திருவானைக்கா திருவண்ணாமலை, திருக்காளத்தி, சிதமபரம் என்பன. இத் திருட்டாந்தங்களால் நம் முன்னோர்கள், ஆலயவழிபாடுபுரிந்து பேறுபெற்று இன்புற வாழ்ந்தார்களென்பது நன்கு வலியுறும்.

ஆலயவழிபாடு கீழ் நிலையென அறிவில்லாமற் பிதற்றும் பேதையர்கள் புன்மொழிகட்கு அன்பர்கள் செவிகொடாது, ஆலயவழிபாடு முத்திப்பேற்றுக்கு உற்ற வழியென உறுதி மேற்கொண்டு, தலங்கள்தோறும் கோயில்கொண்டருளும் திருமுகூர்த்தங்களை வணங்கி உய்வாராக.

“ கண்ணுதலாலய நோக்குங் கண்களே கண்கள்
கறைக் கண்டன் கோயில் புகுங் கால்களே கால்கள்
பெண்ணொரு பாகனைப் பூசிக்கும் கைகளே கைகள்
பண்ணவன்றன் சீர்பாடும் நன்னாவே நன்னா
பான் சரிதை கேட்கப் படுஞ்செவியே செவிகள்
அண்ணல் பொலங் கழனினைக்கு நெஞ்சமே நெஞ்சம்
அவனடிக் கீழடிமை புகுமடிமையே யடிமை ”

என்னும் தேவாரத்தையும், “தலையே நீவணங்காய்” எனத் தொடங்கும் அங்கமாலைப் பதிகத்தையும் அன்பர்கள் ஆய்ந்தறிந்து, ஆண்டவன் அருட்குறியை வழிபட்டு நன்மை படைய வேண்டுகின்றோம்.

திருக்கோயில்களில் அமர்ந்துள்ள அருட்குறிகள், நல்வழிநின்றாரைமுன்வைத்து அவர்க்கும், உலகத்துள்ள பிறர்க்கும், கருணைபாலிப்பதற்காகக் கடவுள் பேரிரக்கத்துடன் தோன்றிய வடிவங்கள் என்பதையும், அவ்வடிவங்கள் காணுந்தோறும், நினைக்குந்தோறும் ‘நான்’ என்பதுபோய் கை சிரத்தின்மேற்குவிபவும், உள்ளம் நல்வழி நிகழவும், பிறவும் ஒருங்கே செய்விக்கவல்லன என்பதையும் அன்பர்கள் உணர்வார்களாக. கோயில்களும், வடிவங்களும் அவ்வளவுதூரம் அன்பைப் பெருக்குகின்றன என்பதையும், அகந்தையை வேருடன் பறிக்கின்றன என்பதையும், கல்நெஞ்சையும் கனியவைக்கின்றன என்பதையும் நாம் உணரும்போது, அவைகளின் திறமைக்கும், சக்திக்கும் காங்குவித்துச் சிரம் வணங்கித் தொழும் செயலுடையவர்களாய் விடுகின்றோம். என்னே! அவைகளின் அற்புதசக்தி. இவ்வுண்மையை ஓர்ந்துணராத சிலர், அறியாமல் இகழ்ந்து பாவத்தைப் பெறுகின்றனர். இவ்விஷயத்தை இத்துடன் நிறுத்தி மேற்செல்வோம்.

## (1) பட்டீச்சுரர் ஆலயம்.

இது இப்பேரூரின் கண்ணுள்ள கோயில்களில் முதன்மையுடையது. இதன்கண் எழுந்தருளும் கடவுளுக்குப் பட்டிநாதர், பட்டீச்சுரர் என்று பெயர்கள் வழங்கப்படுகின்

றன. இப்பெயர்க்காரணம் காமதேனு பட்டியிட்டு வழிபட்டமையால் உண்டானதெனத் தலபுராணம் வடகயிலாயப்படலம் 17-ஆம் செய்யுளில்,

"பட்டிநாதரென வெம்மை நீளுலகு பன்னுகின்ற திமையாற்பசு
வோட்டிவந்தனை புரிந்தவேது வினவ்வும்பரார் பசுவும் வந்தனை
சட்டவாற்றிபது ........................................................"

என வருவதாலும்;

"காமதேனுபுர மென்ன விங்கரி காமமல்கு பெயர்கொள்ளவு
நீமனுதாவின் வைகலா னரசினீடு சூழலிதுபட்டியேன்
னுமமேவவு நமக்குமப்பெயர் முனட்டி நாதனெனவோதவு
மேமமாருலக முற்றுமின்பமுற வீண்டுனக்கு வாமாக்கினும்"

என்ற குழகன் குளப்புச்சுவடுற்றபடலம் 108-ஆம் கவியாலும் ஈன்கறியப்படும். "கோட்டீச்சுரர்' என்ற மற்றொரு பெயரும், இக்கடவுளுக்குளதென்பதும் புராணத்தாலறியப் படுகிறது. காஞ்சிபுரம் ஏகாம்ரநாதர், காமாட்சியம்மையின் முலைத்தழும்பையும், வளைத் தழும்பையும் மார்பினிடத்தே வடுவாகப் பெற்றதுபோல, பேரூர் பட்டீச்சர், பசுக்கன் றின் (1) காற்குளம்புச் சுவட்டையும் (2) கொம்பின் நுனிச்சுவட்டையும் சிரசில் ஏற்று அவ்வடையாளங்கள் தோன்ற விளங்குகின்றனர். இப்பொழுது புதிதாகக் கருங்கல்லால் நிராழிமண்டபமும், உயர்ந்த மதிற்சுவரும், சுற்றுப்பிராகாரக் கற்றளவரிசையும் செய் யப்பெற்று, மூலஸ்தான கோபுரத்திற்கு வர்ணமும் தீட்டப்பெற்றிருக்கின்றன. கர்ப்பக் கிரக வெளிச்சுவற்றில் சிலாசாஸனங்கள் பல வெட்டப்பட்டிருக்கின்றன. உட்பிராகா ரத்தின் தெற்குவரிசையில் இரும்பு அளியிட்ட நெடிய மண்டபத்தில் ஸ்ரீ விநாயகதேவர் உள்படச் சமயாசார்யர்கள் நால்வரும், திருத்தொண்டர் அறுபத்துமூவரும், மேற்கு வரிசைமண்டபத்தில் ஆவுடையார் சகிதம் பெரியவுருவில் சப்த லிங்கங்களும், சகஸ்திர லிங்கமொன்றும, வடக்கு மண்டபத்தில் மேற்குக்கோடியில் வள்ளிதெய்வயானை சமேத குமாரவேள் ஆலயமும், தட்சிணாமூர்த்தி ஆலயமும், சண்டீச்சுரர் கோவிலும், சூரியமூர்த்தி, சந்திரதேவர், பைரவக்கடவுளர்க்கு ஆலயங்களும் இருக்கின்றன.

---

(1) இவ்வுண்மை——

——"வலத்தாலே
கொம்பின் குளம்பின்வடுக் கொண்டருளி மெய்யடியார்
தம்பிறவி மாசுவடுத் தன்னூதலம்."
(வெள்ளைவிடுதூது)

——"தன்னென்று
(2) கன்று விளையாடக் காற்சுவடுங் கோட்டினையும்
நின்று முடிமேற்கு நீர்மையான்."
(மும்மணிக்கோவை)

எனவரும் பிரபந்தச் செய்யுட்களால் அறிக.

## (௨) பச்சைநாயகியார் ஆலயம்.

இவ்வாலயம் பட்டிசுரர் ஆலயத்திற்கு வடபால் 20 கஜதூரத்திலிருக்கிறது. இது வும் சிற்றாலயம். சுற்றுப்பிராகாரமில்லை. புதிதாக ஸோபிமண்டபம் கருங்கற்கொண்டு அழ காகக் கட்டப்பட்டுத் தளவரிசை செய்யப்பட்டிருக்கின்றது. மூலஸ்தான கோபுரத்திற் குப் புதிதாக வர்ணந்தீட்டப்பட்டிருக்கிறது. ஆலயத்தில் அருட்குறிகொண்டெழுந்தரு ளிய அம்பிகையார் திருப்பெயர் பச்சைநாயகி. பார்வதியாரது இயற்கைநிறம் பச்சைவண் ணமாதலால் அப்பெயர் கொண்டனர்போலும். "மரகதநாயகியார்" எனவும் பெயர் வழங் குகின்றனர். அம்மையார் அழகொழுகும் சுந்தரவடிவினர். அருந்தமிழுணர்ந்த பெரும் பெயர்ப் புலவர் ஸ்ரீ கச்சியப்பமுனிவர், அவ்வடிவழகினைத் தாம் பாடிய பேரூர்ப்புராணத் து இனிய செய்யுளொன்றால் இனிதுற விளக்கியிருக்கின்றனர். அச்செய்யுள் வருமாறு—

"இருள்குடி கொண்ட கூந்தல்
எழில்குடி கொண்ட பொற்றோள்
அருள்குடி கொண்ட வாட்கண்
அணிகுடி கொண்ட கொங்கை
பொருள்குடி கொண்ட செஞ்சொற்
புகழ்குடி கொண்ட தாளும்
மருள்குடி விலகி வைகும்
மரகத மயிலைத் தாழ்தான்" (63)

(நாரதன் வழிபடுபடலம்)

தேவியார் திருவாலயத்தின் முன் மண்டபத்தின் வடபாகத்தில், காத்தற்கடவுளாகிய திரு மாலுக்கு ஓர் சிற்றாலயமும், தென்பாகத்தில் துர்க்கை ஆலயமும் இருக்கின்றன. ஆயின், திருமால் ஆலயம் மிகச் சிறிது. கி. பி. 740 முதல் 770 வரை, மதுரையில் அரசுபுரிந்த "நெடுஞ்சடையன்" என்ற ஓர் பாண்டியன் பரம வைஷ்ணவனும், திருமால் திருவடியே சிந்திக்கும் சீலனும் நம்மாழ்வாரது மெய்த்தொண்டனுமாய்ச் சிறந்து,

"பூஞ்சோலை யணிபுறவிற் காஞ்சிவாய்ப் பேரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக் குன்றமன்னதோர் கோயிலாக்கினன்"

என்று வேள்விக்குடி சாஸனத்துக் கூறுகிற பெருங்கோயிலாயில்லை. அச்சாஸனத்து,

" ஆழிமுன் னீரகழாக அகல்வானத் தகடுரூஞ்சும்
பாழிநீண் மதில் பாங்கோங்கி"

என்று சிறப்பிக்கப்பட்ட நெடியமதில்களும், அகன்ற அகழ்களும், உயர்ந்த கோபுர மும் இவ்வாலயத்தில் காண்பதிற்கில்லை. திருமாலுக்குரிய அப்பேராலயம் என்னவாயிற் றென்பது இப்பொழுது அறியக்கூடாதவாறு அந்தகாரப்பட்டிருக்கின்றது.

## (௩) கலியாணமண்டபம்.

இம்மண்டபம் பட்டீச்சுரர், பச்சைநாயகியார் ஆலயங்களுக்கு இடையில், இப்பொ

முது புதிதாகக் கருங்கற்களால் அழகுபெறச் சுமார் ஐம்பதினாயிரம் ரூபா செலவிட்டு நன்ருகக் கட்டப்பட்டிருக்கிறது. நெடுநாளாகப் பல அன்பர்கள் ஆவலுடன் எதிர்பார்த்த இக் கலியாணமண்டபம், சிலரும் பேரன்பும் நிறைந்த சில சிவநேயர்கள் பொருளுதவியால், தெய்வகாரியங்கட்கு உபயமாகச் செய்விக்கப்பட்டது. இப்புண்ய காரியத்தில் ஈடுபட்டு இத்திருப்பணியை இனிதுற நிறைவேற்றி அடியார்கள் நல்லன்பிற்கும், பெருமான் பேரருளுக்கும் உரியர்களாகிய மெய்யன்பினரை நாம் பெரிது பாராட்டுகின்ருேம். தற்போது இக்கலியாணமண்டபத்தில், அறுபத்துமூவர் உற்சவ முகூர்த்தங்களும், சமயாசார்யர்கள், சோமாஸ்கந்தர் முதலிய தேவர் திருவுருவச் செப்புவிக்ரகங்களும், புதிதாக எழுந்தருளுவிக்கப்பெற்று நாடோறும் சோடசோபசார தீபாராதனைகள் நிகழ்ந்து வருகின்றன. உற்சவ முகூர்த்தங்களனைத்தும் இனி, இம்மகாமண்டபத்திலேயே அலங்காரஞ் செய்விக்கப்பட்டு பவனிக்கு எழுந்தருள்விக்கப்படும்.

## (4) கனகசபை.

சிற்சபாநாதன் திருநடனம்புரியும் இத்திருமன்றம், வாகனமண்டபத்திற்கு மேற்பாலமைந்துள்ளது. பெருமான் தெற்குநோக்கித் திருநடனஞ்செய் தருளுகின்றனர். இது, மங்கலான வெண்மை நிறம்வாய்ந்த கற்களால் கம்பீரத்தோற்றத்தில் சிற்பத்தின் பெட்டகமோ, ஓவியங்களின் கொலுக்கூடமோ, என்று கண்டோர், வியந்து, புகழ்ந்து கூறும்படி 94 அடி நீளமும், 38 அடி அகலமும் 15 அல்லது 16 அடி உயரமும் கொண்டு 36 பெருந்தூண்கள் இருவரிசையில் வலிமைபெற நின்று, சுமப்பதுபோல் அமைந்துள்ளது. இச்சித்திரத்தூண்கள் சிற்றுளித்திறமையிலும், ஓவியச்சிறப்பிலும் ஒப்புவமையற்றன. முதல்வரிசையில் இருபக்கங்களில் நிறுத்தப்பட்டுள்ள பதினெட்டுத் தூண்களில் எட்டுத்தூண்களே விசேஷ வேலைப்பாடமைந்த விசித்திரத்தூண்கள். இவைகட்கு அழகிலும், அந்தஸ்திலும், குறைந்தவை நான்கு தூண்கள். மற்ற ஆறு தூண்கள் சிங்கங்கள் யானைகளின் மேனின்று தும்பிக்கையைச் சிங்கங்கள் வாயிலுள்ள ஓர்வகைக் கொடிகளைக்கொண்டு மேலிழுப்பதுபோன்ற வுருவத்தில் நன்ருகச் சித்திரிக்கப்பெற்றுள்ளன. மற்ற வரிசையின் கண்ணுள்ள 18 தூண்கள், சாமான்யமானவை. முதல் குறித்த எட்டுத்தூண்களும், பின்னர் குறித்த நான்கு தூண்களுமே பிரஸ்தாபத்திற்குரியன. இச்சித்திரத்தூண்களில் நேத்திரானந்தமாய் அமைந்துள்ள அழகிய சிற்பங்களின் அற்புதங்களையும், எங்குமே காணப்படாத மன்றத்தின் அமைப்பையுமே யாத்திரிகர்கள் உணரும்பொருட்டு விளங்கக் கூறுகின்ருேம்.

முதலாவது, இத்திருச்சபையின் முகப்பில் கருங்கல்லாலாகிய இரண்டு யானைகள் இம்மன்றத்தைக் காவல்காக்கும் பாவனையில் நிறுத்தப்பட்டிருக்கின்றன. இதற்கடுத்த இருவரிசைத்தூண்களில் இரண்டு, ஓர் குதிரையின்மீது வீரனெருவன் வீற்று, குதிரையின் கடிவாளத்தைக் கையிற் பிடித்திருப்பது போலும், ஓர் புலி அக்குதிரையை எதிர்த்துக்கடிப்பதுபோலும், வீரிருவர் அப்புலியைத் தமது கையிலுள்ள ஈட்டிப்படையால் குத்தி விலக்குவதுபோலும் சித்தரிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வளவும் 5 அடி உயரமும், 3 அடி அகலமுங்கொண்ட ஒரே கல்லில், சிற்றுளியாற் குடைந்து தோண்டப்பெற்றிருக்கின்றன.

வீரர், குதிரை, புலி, ஆயுதங்கள் முதலியன உயிருள்ளனபோல், காண்போர்கருதும்படி வெருநயமும், அதிநுட்பமுமான வேலைப்பாடுகளுடன் விளங்குகின்றன. இங்ஙனம் ஒரே கல்லிற்குடைந்து இன்பநலம் விளக்குஞ் சிற்றுளித்திறமையை ஆங்கில சிற்பஞானர் "Monolithic caves" எனக்கூறுவர். ஒரே கல்லில், சிற்றுளியால் குடைந்து, சிற்பத்திறம் விளங்குமாறு செய்விப்பவர் பல்லவமன்னவர்கட்கன்றி மற்றையோர்க்கரிது. அவர்களால்தான், முதல் முதல், தென்னிந்தியாவில் இம்முறை தொடங்கப்பெற்றது. மாமல்லபுரம், திருசிராப்பள்ளி, பல்லாவரம், வல்லம், தளவானூர், காஞ்சீபுரம், நாமக்கல், அன்னவாசல் முதலிய திருத்தலங்களில் பல்லவர்களால் எடுப்பிக்கப்பட்ட கோயில்களின் தூண்கள், மண்டபங்கள், கூவங்கள், திருக்குளங்கள் முதலியவைகளில் விளங்கும் சித்திரங்களே இவற்றிற்குப்போதிய சான்றாம். அவைகளில் இப்பேரூரும் ஒன்று. இச்சிற்பத்திறமையைக்கொண்டே பேரூரிலுள்ள கோயில்களும், கனகசபையும், சிங்கக்கிணறும் பல்லவர்களால் எடுப்பிக்கப்பட்டதென்பதே பலரது அபிப்பிராயம். கோயில் மண்டபங்களிலும் தூண்களிலும் சிங்கம் வாயைத்திறந்தபடி குந்தியும், படுத்திருக்கும் பாவனையில் வெட்டப்பட்டிருப்பது ஆறாம் நூற்றாண்டில் தென்னிந்தியாவில் அரசபுரிந்த, 'நரசிங்கப்போத்தரையன்' என்ற பல்லவ அரசன் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டது. இதன்றி, தூண்களிலும், பாறைகளிலும், மண்டபங்களிலும், புராணக்கதைகளை வெட்டுவிக்கும் வழக்கம், மேற்குறித்த நரசிங்கன் காலத்தில் ஏற்பட்டதேயாம். இவ்வடையாளங்கள் பேரூர்க் கோயில் மண்டபங்களிலும், தூண்களிலும், காண்பதுகொண்டு பல்லவ வமிசத்துக்கோயவாசனால் இம்மண்டபமும், கோயில்களும் கட்டுவிக்கப்பட்டனவென்பது நிச்சயிக்கப்படுகிறது.

இனி, இதனை அடுத்த தூண்களைப்பற்றிக் கூறுவாம். நாம் கூறுவதைத் தெற்கிலிருந்து வடக்குநோக்கிநிற்கும் மேற்குவரிசைத் தூண்களைப் பற்றியதென்பதை, அன்பர்கள் நினைவிற்கொள்ளக் கோருகிறோம். 2, 3-ஆம் தூண்கள், சிங்கம் யானையை மிதித்திருக்கும் பாவனையில் அமைந்தவை. 4-ஆம் தூண்:—யானையுருக்கொண்ட அசுரனைக்கொன்று, அதன் தோலையுரித்த திருவிளையாடலைக் குறித்தது. இதன்வரலாறு:—"கயமுகாசுரன் என்னும் ஓர் அசுரன், பிரமனைநோக்கித் தவஞ்செய்து சிவபிரானொழிந்த மற்றொருவராலும் அழியாவரம்பெற்று, சாதுக்களை வருத்திவந்தனன். இவனது கொடுமைக்கஞ்சிய முனிவர், காசியிற்சென்று சிவபிரானை அடைக்கலம்புகுந்தனர். மலைபோன்ற யானையுருக்கொண்ட கயமுகன், அங்கும் தொடர்ந்து துன்புறுத்த முயன்றனன். ஏழைபங்காளனாகிய எம்பிரான் பெரிதும் முனிந்து, தம்மைச் சரண்புகுந்தாரைக்காக்கப் பிரளயகால வுருத்திரவுருவங்கொண்டு, அக்கொடிய கயமுகனைக் கீழே விழுமாறு உதைத்து அவனது பிடரியைக் கீறித் தோலையுரித்துப் போர்வையாகக்கொண்டனர்" என்பது. இது சுமார் $5\frac{1}{2}$ அடி உயரமும், 3 அடி அகலமும் கொண்ட ஒரே கல்லில் மேற்கூறிய வரலாறு சித்திரிக்கப்பட்டிருக்கிறது. சிவபெருமான் (6) அடி உயரத்தில் யானைத்தோல் போர்வையின் மத்தியில், கம்பீரத்தோற்றத்தில், வீரக் கழலணிந்த ஓர் பாதத்தைத் துண்டித்த யானைச்சிரசின் மீது ஊன்றியும், மற்றொருபாதத்தை உயரத்தூக்கி முழந்தாளைத் தடையுடன் செருக்கியும் நிற்கின்றனர், உரித்த யானைத்தோல், நால் அங்குல கனத்தில் பெரிய கோணவடிவில் காண்பதும், தோலின் பின்புறம் யானையினது நான்கு கால்களும் வாலும்

தோக்குமாறு சிற்றுளியால் திறம்பெறக் குடைந்திருக்கும் புதுமையும் காண்போர் மூக்கின்மீது விரலைவைத்து வியக்கவும், கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கவும் செய்யவல்ல திறமையுடையன. பிரளயகாலத்தின்போது, சிவபெருமான் கொண்டிருந்த கோலமும், ஏந்திய ஆயுதங்களும், பிரானுடைய பராக்கிரமத்தை விளக்கும் பாவனையில் கண்விருந்தாய் இலங்குவது பெரிதும் பாராட்டற்குரியது.

5-ஆம் தூண்:—இது தக்கன் வேள்வியை வீரபத்திர வடிவில்தோன்றி தகர்த்த திருவிளையாடலைக் குறித்தது. இதுவும் மேற்குறித்த அடியின் அகலமும், நீளமும் உடையது. அகோர வீரபத்திரர், ருத்திராம்சத்தில் முயலகனைத் தமது காலின் கீழ் மிதித்துத் தமது கையிலுள்ள முச்சூலப்படையால் அவனது சிரசைப்பிளக்கும் தோற்றத்தில் விளங்குகின்றனர். எட்டுக்கைகளும், அவைகளுக்குரிய படைகளும் அழகாய்த் துலங்குகின்றன. முச்சூலப்படை அழகான உருவிலமைந்து கருங்கல்லும் இவ்விதம் ஓவியவல்லார் கைப்பட்டு சிற்பநுட்பத்தின் திறம்பெற்றுக் கண்டோர் களிகூர்ந்து வியப்புறும்வண்ணம் இலங்குவது பாராட்டற்பாலதாம்.

6-ஆம் தூண்:—இது. சிவபெருமான் திருவாலங்காட்டுக்காளியுடன் நடனஞ் செய்தருளிய திருவிளையாடலைக்குறித்தது. இதற்கு, "ஊர்த்துவதாண்டவம்" என்று பெயர் சண்டவதாண்டவம் எனவும் கூறுவர். இந்நடன முகூர்த்தம் எட்டுத் தோள்களும், பதினாறுகைகளும் உடையதாய், ஒரு பாதம் பூமியிலூன்றியும், மற்றபாதம் மேல் நோக்கியும், பதினாறு கைகளில் மேல்நோக்கிய திருப்பாதத்தில் ஓர் கை கவசமாகவும், மற்ற மூன்றுகைகள் தாள்மேலிருக்கவும் வைத்து, எஞ்சிய பன்னிரு திருக்கரங்களிலும் மழு, சர்ப்பம் கிளி, தமருகம், சூலம், சதங்கை, கபாலம், அபயம் முதலிய ஆயுதங்கள் அமைந்து, எழில் பெருந்தோற்றத்தில் இனிதாக விளங்குகின்றது. பெருமான் நடனத்திற்கேற்பப் பிர்ம்ம, விஷ்ணுக்கள் நாரதர், நந்தி, தும்புரு முதலிய இருடிகள் இசைக்கருவிகளை இனிதுறமுழக்குவதும் வெகு அந்தமும் அமைப்புமாய்ச் சிற்பங்கள் பொலிவுறுகின்றன. இதுவும் மேற்குறித்த அடியின் அகலமும் நீளமும் கொண்டதே.

7-ஆம் தூண்:—இது பிரணவவடிவம் பெற்ற பிள்ளையார் திருவுருவத்தைக்குறித்தது:— இத்திருவுருவம்-யானைமுகமும், பெருவயிறும்வாய்ந்து மோதகம்-அங்குசம், பாசம், இவைகளை நான்கு திருக்கரங்களில் தாங்கிப் பெருச்சாளிவாகனத்தில் இனிதுற அமர்ந்து, மலர்ந்த முகத்தில், தம்மை அன்புடன் அடிவணங்கும் அன்பர்கட்கு அருள் சாதிக்கும் தோற்றத்தில் பெரிய திருவுருவில் அழகாய் விளங்குகின்றது. சிற்றுளித்திறமையைத்தெளிவு பெற விளக்கும் கஜானனர் கவினுறு வடிவம் கண்பெற்றூர்கண்டு மகிழ்தற்குரியதாம். இதுவும் மேற்குறித்த அடியின் அகலமும், நீளமும் கொண்டதே.

8. 9-ஆம் தூண்கள்:—முதலிரு தூண்களில் குறித்த உருவங்களே இவைகளில் சிறிது வேற்றுமையுடன் சித்தரிக்கப்பட்டுள்ளன. 10-ஆம் தூண் சிங்கவடிவம்.

11-ஆம் தூண்: இது:—குகப்பெருமான் ஆறுமுகம் வாய்ந்த திருக்கோலத்தைக் குறித்தது. இக்குகவேள் ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும்

அறுகுணங்களை விளக்கும் ஆறு திருமுகங்களுடன், பருத்த மயில்வாகனத்தமர்ந்து, மார்பிலணைந்த வெற்றிவேல் வீறுபெற்று விளங்க, வள்ளிதெய்வயானையரின்றி ஏகனாக விளங்குகின்றனர். ஆறிருதோளும், பன்னிருகரங்களும், அவ்வழகிய கரங்களில் வேல், அம்பு, வாள், சக்கரம், பாசம், வச்சிரம், வில், கேடகம், தவசம், அங்குசம், வரதம் என்னும் பன்னிரு ஆயுதங்களும் எழில் பெற்றிலங்க. புன்னகை தவழ்ந்த பொலிவுறு முகத்துடன், கம்பீரத்தோற்றத்தில் பெருமிதமாய் வீற்றிருக்கும் அற்புத அமைப்பு விம்பிதமாயுள்ளது. இது 5 அடி உயரமும் 3 அகலமும் கொண்ட பெருந்தூண்.

12-ஆம் தூண்:—இது திருவாலங்காட்டுக் காளி சிவபெருமானுடன் திருநடனம் புரியும் திருக்கோலத்தைக்குறித்தது. காளி, தனது திருக்கரங்கள் எட்டிலும், அவ்வடிவத்திற்குரிய ஆயுதங்களை யேந்தியவண்ணம் இலங்குகின்றனள். சிவபெருமானுடன் காளி நடனத்தில் வாதில் தோற்றதால், நாணித் தலைகுனிந்த பாவனையில் உருவம் நலம் பெற்று விளங்குகின்றது. சிற்பி நடனவாதத்தைத் தன் மனதுள் நினைத்துக்கொண்டே சித்தரித்ததால், அவனது எண்ணமும், கருத்தும் அப்பிம்பத்தில் அப்படியே பிரதிபலித்து விளங்குகின்றது. சற்று ஊன்றி கவனிப்பார்க்கு இவ்வுண்மை தெளிவுபெறத் தோன்றும். இதுவும் மேற்குறித்த உயரமும் அகலமும் உள்ளதே.

13-ஆம் தூண்:—இது, அகோரவீரபத்திரர் அவதாரத்தைக் குறித்தது. இவ்வீரபத்திரர் ஐந்தாவது தூணில் விளக்கிய, கோலமெல்லாம் ஒருங்கடைந்து, சிறிது வேற்றுருவம் பெற்று கொதித்தெழும் சினக்குறிப்பில் எட்டுக்கைகளில் போர்க்குரிய ஆயுதங்களைத் தாங்கிக் கோரூபத்தில் விளங்குகின்றனர். ஒருகை பின்னமடைந்து அதற்கு இரும்புக்கவசம் போர்க்கப்பட்டிருக்கிறது. இதுவும் மேற்குறித்த உயரமும் அகலமும் உள்ளதே.

14-ஆம் தூண்:—இது, பிக்ஷாடனர் உருவம் அல்லது கங்காளவடிவமேற்ற திருவிளையாடலைக் குறித்தது. இக்கங்காளவடிவம், தாருகாவனத்து முனிவர்கள், தாம் நிறைந்த அறிவும், தொழிலும் கொண்டதாக வீண் இறுமாப்புக்கொண்டகாலத்து, அவர்கள் இறுமாப்பைக்கெடுத்து நல்லறிவு சுடர்கொளுத்த பெருமான்கொண்ட அருளுருவாம். வேதரூபமாகிய பெருமான் திகம்பரதாரியாய், பூணூலும் உடையாகி, அடியாருடைய பாசப்பகையை அழிக்கும்பொருட்டு ·இச்சாஞானக்கிரியா ரூபமாகிய சூலப்படையையும், அடியாருடைய பத்திப்பிக்ஷையை ஏற்கும்பொருட்டுப் பாசக்திரூபமாகிய கபாலத்தையும், அடியார்க்கு ஞானம்கொடுத்தற்பொருட்டு நாதரூபமாகிய டமருகத்தையும் கைகளிற் றாங்கி, பாசங்களை இயக்கிப் பரிபாகப்படுத்தும்பொருட்டுத் திரோதா சக்தி ரூபமாகிய பாதுகைகளையும் தரித்துக்கொண்டு, மந்தகாசந்தவழ்ந்தமுகத்துடன் விளங்கும் வடிவம் மிகவும் அத்புதமானது. இவ்வடிவம் தாருகவனத்து முனிவர்கள் செய்த, மாரணவேள்வியினின்றும் தோன்றிய புலி, மழுப்படை, மான், பாம்புகள், பூதங்கள், சிரோமுண்டம், முயலகன் முதலியவைகளை உடுத்தும், தரித்தும், ஏந்தியும், அணிந்தும், பூதங்களைத் தஞ்சேனையாக்கியும், சிரோமுண்டத்தை மாலையாய்ப்பூண்டும், முயலகனைக் காலால் மிதித்தும்,

மந்திரங்களை உடுக்கையாகக் கையகத்தமர்த்தியும், உயிர்கட்கென ஒன்றுமில்லை, எனது கட்டளைப்படியே எதுவும் நடக்கும், அற்பமாவது செருக்குக்கொள்ளவேண்டாம் என அறிவுறுத்துவதுபோல் காணப்படுகின்றது. இத்தகைய உயர்ந்த தத்துவங்களைத் தன்னுள்ளடக்கிக்கொண்டிருக்கும் சித்திரத்தை இவ்வளவு அருமைப்படச் செதுக்கிய சிற்றுவலானின் சிற்பத்திறமையைக் கண்பெற்றார் கண்டு களிக்கவேண்டுமேயன்றி, எழுத்தில் அடங்குவதன்று. கங்காளமூர்த்தியின் செஞ்சடையழகும், முனிவர்பத்தினிகள், நிலைவற்று ஆடையவிழ்ந்து வீழ்வதும் அறியாராய் வேட்கைமீதூர்ந்து, பெருமான் பேரழகில் ஈடுபட்டு நிற்பதும், பிக்ஷாடனகோலமும், தோற்றமும், வருணிக்குந்தரமல்ல. இதுவும் மேற்குறித்த உயரமும் அகலமும் உள்ளதே.

மேற்குறித்த அற்புதச் சித்திரத்தூண்கள் ஒவ்வொன்றும், அழகின் அவதாரமென்றே கண்டோர் களிப்புடன்கூற முந்துவரேயன்றி, சாமான்யமாய் அங்கே பார்த்தது தானே என்று அலட்சியமாய்க்கூற ஒருபோதுந்துணியார். எட்டுத்தூண்களிலும் புராணக்கருத்துக்குப்பொருந்திய பாவனையும், தோற்றமும், பிறர் மனதில் உதிக்கும்படி சிற்றுளியில், ஒரேகல்லில், குடைந்துதோண்டிக் காண்பார் கண்களுக்கு, நல்விருந்தாய்ச்சமைத்த சிற்பி, எவ்வளவு கைதேர்ந்த வல்லானாயிருத்தல் வேண்டும். பன்னிரண்டு தூண்களும் மழமழப்பாய், தந்தத்தில் கடைந்தெடுத்துவைத்ததுபோலும், தேர்ந்த சிற்பங்கட்கு இருக்கவேண்டிய எல்லா அமைப்புக்களும் ஒருங்கே பொருந்தவும், பிம்பங்கள் ஊறுபடாமலும், விகாரந்தோன்றாமலும், அமைத்த அற்புத சமர்த்து வியத்தற்குரியதே. ஒவ்வொன்றும் உயிருள்ள பிம்பங்கள் போன்றே காண்கின்றன. அன்றியும், நகக்கண், விரல், நாம்புத்தாரை, ரோமவரம்பு, எலும்புக்குறி முதலியன வியக்குந்தன்மையன. இதுபோன்ற திருமன்றம்தென்னாட்டில் எங்குமே காண்பதரிது. இத்திருசபையைக் காணாதகண்கள், புண்களேயன்றி கண்களென்று கூறமுடியாது. இது அபூதவருணனை, எழுத்தலங்காரம் என்று அன்பர்கள் எண்ணிவிடக்கூடாது. கண்டோர் எழிலொழுகும் அதன் உண்மை அழகை, வருணிக்க ஆற்றல் இல்லாது விட்டது குறையெனக்கூறுவார்களேயன்றி, மிகையெனக் கூறார்.

நடராஜர் எழுந்தருளும் பின்மண்டபம் நான்கு பெரும் சித்திரத்தூண்களால் தாங்கப்பெற்று 39 அடி நீளம், 35 அடி அகலம் அளவில் சமைந்து சிறப்பாயுள்ளது.

இம்மண்டபத்தின் முகப்பில், பட்டிமுனி, கோமுனி உருவங்கள், சபாபதியின் திருநடனத்தைச் சிந்தைக்களிக்கநின்று சேவித்துக்கொண்டிருப்பதுபோலும், இவர்களுக்குமுன், துவாரபாலர்கள் பேருருவில் கற்சிலையில் அமைந்து காவல்காப்பதுபோலும் சித்தரிக்கப்பட்டுள்ளன.

நடராஜர் அமர்ந்துள்ள மண்டப முன்பக்கத்தின் பக்கவாட்டுகள் பிறர், உள்ளே புகாவண்ணம், சந்தனமரத்தால் அழகிய கொடிகளால் அடைக்கப்பட்டு, அக்கொடிகளுக்குப் பலவர்ணங்கள் தீட்டிக் கிலிட்டும் செய்யப்பட்டிருக்கின்றன. மரத்தின் கொடிகள் விசித்திர வேலைப்பாடுகளுடன் விளங்குகின்றன.

* கனகசபையின் மேற்றளத்தின் நடுவில், அஷ்டதிக்குபாலகர்கள், அவரவர்களுக்குரிய வாகனங்களில் தங்களுக்குரிய அங்கங்களுடன் அழகாக விளங்கவும், இவர்களுக்கு நடுவில் மூன்றடுக்குக் கமலமலர் இதழ்கள்விரிந்து பரவ, அதில் கிளிகள் வந்து மொய்த்திருப்பதுபோலும் கருங்கல்லில், வெகு திறமையாகச்செய்து, காண்போர் வியக்கும்படி செய்திருப்பதும் கண்டு களித்தற்குரியதாம். இம்மண்டபமுழுதும் இப்பொழுது பலவர்ணங்களில் அழகாகச் சித்திரந் தீட்டப்பெற்றிருக்கிறது. இத்தகைய சித்திரங்களுக்குத் திருநிலயமாய் அழகுசிறக்கும் திருமன்றத்து அருட்சக்தியாகிய அம்பிகையாரொடு தில்லைத்தாண்டவர் திருநடனஞ்செய்தருளுகின்றனர். இவ்வருள்வடிவத்தையும், ஆனந்தகோலத்தையும், அன்பர்கள் கூர்ந்து கவனிப்பின், சில உண்மைகள் காண்பர். அவை:—நடனசபாபதியின் அழகிய அவயவங்களில் ஒன்று, ஆத்மாக்களுக்குரிய உடம்புப் பொருள்களை எடுத்துக் கொடுப்பதாகிய படைப்பையும், மற்றொன்று, அவைகள் நிலைபெறுவதையும், பின்னொன்று, அவைகளைக் காலம் நோக்கி நியதியாகப் போக்குதலையும், வேறொன்று, நாம் கொண்ட இச்சைகள், அவ்விச்சைவழி மிகுதியாய் அழுந்தி விரைவில் வெறுக்கச்செய்து அருள்காட்டுந் தன்மையினையும், மீண்டு ஒன்று, குறைவிலா இன்பப்பேறு அளித்தலையுமாம், இவைகளைப் "பஞ்சகிருத்தியம்" எனக்கூறுவர். இக்கருத்தினைத் திருப்பேரூர் "கிள்ளைவிடுதூது" ஆசிரியர், தமது நூலில் தெளிவுபெறக் காட்டுவதாலும் உண்மை அறியலாம். அது :—

——"நெட்டிலைவேற்
கண்ணுடைய வெங்கள்சிவ காமியுமை கண்களிப்ப
விண்ணுடை யோர்கண்கள் விருந்தபா—வெண்ணுடைய
தோற்றந் துடியதனிற் றொன்றந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார—மூற்றமா
மூன்று மலர்பதத்தே யுற்ற திரோத முத்தி
நான்ற மலர்பதத்தே நாடுகவென்—றூர்சொல்
ஐந்தொழிற்குந் தானே பதியெனக் காட்டுதற்காஞ்
சுந்தாமார் திவ்ய சொருபமுடன்— வந்தனையோ
வின்றென் றெனைப்பார்த் திளமுறுவல் காட்டி யைந்தும்
வென்றுள்ளோர் சிந்தை விமலனே—நின்றிலகும்
அம்பலத்தே யாடுகின்ற வானந்தச் செந்தேனைச்
செம்பதுமப் பாதங்கள் சேவித்தேன்"

எனவருவதாம்.

---

" * * * * * *

பெருமா நடன சபையுற்றேன்—திருமான்
அழகத்திரிநா யகன்பொன்னூற் செய்தங்
கழகார் திருக்கயிலை யாக—வழகுசெய்து
கண்கொண்டு பார்த்தற் கடங்காத வோவியமா
மென் கொண்ட தேவர்க் கிருப்பிடமாய்" (கிள்ளைவிடுதூது)

இத்திருமன்றத்திற்கு எதிரில் பெரும்பணச்செலவில் நாட்டுக்கோட்டை நகரத்து வணிகப்பிரபுவும், சிவநேசச்செல்வருமாகிய உயர்திருவாளர் சோமசுந்தரஞ் செட்டியாரவர்களால் வெண்ணிறக்கருங்கற்களில் நன்றாகச்சித்திரிக்கப்பட்ட பெருந்தூண்கள் நிறைந்த பெரியமண்டபமும், புதிய உருவில், அழகிய அமைப்பில் பலிபீடம், கொடிமரம், நந்தி மண்டபம் முதலியனவும், நடராஜர் சந்நிதிக்கு நேரெதிரில் ஆகுவாகனத்தில் கஜானனரும் பார்வதியாருடன் இடபவாகனத்தில் சிவபெருமானும், வள்ளிதெய்வயானையருடன் மயில் வாகனத்தமர்ந்த அயிற்வேற்கடவுளும், சமயாசாரியர் நால்வரும், பலவர்ணங்களில் கண்ணாடியில் தீட்டிய திவ்ய திருவுருவங்களும், கிழக்குப் பெரிய கோபுரவாயிலுக்கருகில் தேவஸ்தானக்கமிட்டி ஆபீசும், அதனை யொட்டித் திருவமுது செய்யும் மடைப்பள்ளியும், புதிதாகச்செய்விக்கப்பட்டும் கம்பீரத்தோற்றத்தில் இலங்குகின்றன.

இனி உட்பிராகாரத்திலுள்ள ஆலயம் மண்டபங்களைக்கூறிப் பிராகாரத்திற்கு வெளியிலுள்ள சிற்றாலயங்களையும், அவைகளின் சீர் சிறப்பு முதலியவைகளையும் வரிசைபெறக் கூறி முடிப்பாம்.

உட்பிராகாரத்தின் தென்புறம் மேற்குக்கோடியில் யானைமுகத்தெய்வமும், சுவர்க்க வாசலுக்கெதிரில் மேற்றிசை நோக்கி நின்றருளும் தண்டபாணி கோயிலும், அம்மன் சந்நிதானத்தினையொட்டி சண்டீச்சுரர் ஆலயமும், தேவியார் திருக்கோயிலுக்கு நேரில் புதிதாய் எடுப்பிக்கப்பட்ட பெரிய திருவாயிலும், வடக்கில் யாகசாலையும், தெற்கில் பெரியவாகன மண்டபமும், உள்ளன. ஸ்தூலலிங்கமாகிய கோபுரம், நீண்டபலவருஷங்களாகச் செங்கற்கட்டிடத்தோடிருந்ததை 46000 ரூபாய் செலவில் சுண்ணச்சாந்தினால் அழகிய திருவுருவங்களால் அலங்காரஞ்செய்து, பலவர்ணங்கள் தீட்டிக் கண்விருந்தாய் இலங்கும்படி ஜீர்ணோத்தாரணமுஞ்செய்விக்கப்பட்டிருக்கிறது. இப்பெரும்புண்ணியத்தைத் தமக்கு உரிமையாக்கிக்கொண்ட பேறிவாளர், நகரவணிகப் பிரபு, ஸ்ரீ. சோமசுந்தரஞ்செட்டியாரவர்களே யாவர்.

“கோபுரதரிசனம் பாபவிமோசனம்” என்பது பண்டைப்பழமொழி. அப்பழமொழியின் பொருளுணர்ந்து திருப்பணி செய்வித்த திருமிகு செட்டியாரவர்களின் அறிவுடமை அன்பர்களால் பெரிதும் பாராட்டத்தக்கதாம். மேலும், கோபுரம் என்பது ஒரு ஆண்மகனுக்கு முகம் எப்படிச்சிறந்துள்ளதோ, அதுபோல, கோபுரம், ஒரு நகருக்குச் சிறப்பைத்தருவதாகும். இதுபற்றியன்றோ! ‘‘மாடக்குச்சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்’’ என்றார் பெரியோர்.

புறத்தோற்ற அழகுபற்றி இவ்வாறு கூறுவது ஒருபுறமிருக்க, சாத்திரங்கள் கோபுரம் ஸ்தூலலிங்கமென்று கூறி, கோபுர தரிசனமே சகல பாவங்களையும் நீக்குமென்று எத்துணையோ சிறப்பித்துக்கூறுகின்றன. அதனையறிந்து திருப்பணியாற்றிய திருமிகு செட்டியாரவர்கள் செல்வமே செம்பொருளாம்.

நமது முன்னோர்கள், சைவம் வளர்ப்பதிலும், கடவுளைத்தொழுவதிலும், கோயில்

கள் எடுப்பதிலும், சிரம்பலுக்குமுடையராயிருந்தனர். இக்காலத்தில் அவைகள் பெரும்பான்மை அநுஷ்டிக்கப்படாதொழியினும், சிறு பான்மை அங்கும் இங்குமாகவேனும் சிவநேசமிக்க செட்டியார்போன்ற செல்வர்களால், அநுஷ்டிக்கப்பட்டுவருவது நமது அதிர்ஷ்டவசமென்றே கூறவேண்டும்.

## மற்றைய கோயில்கள்.

### (1) பட்டி விநாயகர் கோயில்.

இவ்வாலயம், காஞ்சிமாநகரிக்குச் செல்லும் வழியில் 'ஐந்நூற்றுவன் செட்டிகள்' என்ற செட்டிமார் திருமடத்திற்கு நேர் எதிரில் மேற்கில் சுமார் 20 கஜதூரத்தில் இருக்கிற சிற்றாலயம். இவ்வாலயத்தில் கோயில் கொண்டருளும் விநாயகதேவர், வேண்டுவார் வேண்டுவதீயும் வித்தகராய், யாவரும் குட்டித்தொழும் பெற்றியராய், பெரிய உருவில் வெண்மை நிறத்துடன் விளங்குகின்றனர். இக்கடவுளைப்பற்றி கச்சியப்பமுனிவர் தாம் பாடிய பேரூர்ப்புராணத்தில் "கங்கையும் பனிவெண்டிங்களும்" என்ற விநாயகர் துதியில், அருமைப்படப் பாராட்டிக் கூறியிருப்பதனால், அவரது பெருமை இனிதுணரப்படும். இச்சிற்றாலயத்தை எடுப்பித்தோர், பிரதிஷ்டை செய்வித்தோர், வணங்கிப்பேறு பெற்றோர் இன்னார்களென்பது அறியப்படாமல் அந்தகாரப்பட்டிருக்கின்றன. இம்மூர்த்தியின் விசேடவரலாறும் அப்படியே. இத்தேவர்க்கு விசேட உற்சவங்கள் நடைபெறுவதில்லை. நாடோறும், ஆலயச்சார்பில் காலைமாலை நடைமுறையொட்டி நித்திய பூசை நிகழ்ந்து வருகிறது. ஒவ்வோர் தமிழ் மாதப்பிறப்புதோறும் தவறாமல் ஐந்நூற்றுவன் செட்டிமார்களின் ஆதரவில், அபிஷேக அலங்காரங்கள் சிறப்பாகச்செய்யப்பட்டு வருகின்றன. விசேட அபிஷேக அலங்காரங்கள் ஒவ்வோர் ஆவணிமாத விநாயக சதுர்த்தசியில் நடைபெற்றுவருகின்றன. இவ்விநாயகப்பெருமானுக்கு வெள்ளிக்கவசமும், திருவாபரணமும் தமது சொந்தச்செலவில், ஸ்ரீ. அருணாசலஞ்செட்டியார் மனைவி திருவாளர்செல்வி, அங்கம்மாள் என்பவரால் செய்விக்கப்பட்டு, அணிவிக்கப்பட்டுவருகின்றன. இவ்வாலயத்தின் பிராகாரத்தின் தரை, கல்லும், முள்ளும் நிரம்பி, வலம வருவார் கால்களைத் துன்புறுத்தி வந்ததை, நல்லபடி செப்பனிட்டுச் சுண்ணச்சாந்தினால் தரையைக் கெட்டிப்படுத்தி வலம்வருவார் துன்புறுவண்ணம், நன்மைசெய்த கோயமுத்தூர் சிவநேசச்செல்வி, பெரியதாய் (பெரியம்மணி) அம்மாள் திருப்பணி போற்றற்பாலதாம்.

இக்கணேசர் ஆலயம், முன்னர், "நச்சுப்பொய்கை" என்ற ஓர் நீர் நிலயமாயிருந்ததாகக் கூறப்படுகிறது. இந்நீர்நிலயம் கந்தக சம்பந்தமான ஒரு வஸ்துவைத் தன்னுள் கொண்டிருந்ததால் குட்டம், பாண்டு, சூலை முதலிய பவரோகங்களைத் தீர்த்துக் குணஞ்செய்துவந்ததாகவும், அத்தகைய கொடிய நோய் அல்லாதாரும், அதில் அறியாமல் மூழ்கிக்கேடுண்டாக்கிக்கொள்வதைக் கோயில் அதிகாரிகள் அறிந்து, அதனை மூடிவிட்டு அங்கு இவ்வாலயத்தை எடுப்பித்ததாகவும் கன்னபரம்பரை வழக்கப்படுகிறது.

## (2) வடகயிலாயம்.

——" புக்கு
நடையனத் தான்பட்டிமுனி நாமமொடு போந்து
வடகைலை செய்து வசித்ததலம்"
(இன்னிலவிடுதூது)

இவ்வாலயம், பட்டிவிநாயகர் ஆலயத்திற்குப் பின்புறம் 20 கஜதூரத்தில் இருக்கிற மிகச்சிற்றாலயம். இவ்வாலயத்திற்குச் செல்வதற்குப் பட்டிவிநாயகர் கோயில் தெற்குமதில் சுவர் ஓரத்திலுள்ள சிறு பாதைவழியிற் போதல்வேண்டும். இது படைப்புக் கடவுளாகிய பிரம்மதேவரால் எடுப்பிக்கப்பட்டதாகத் தலபுராணம்கூறுகின்றது. அப்புராணவரலாறு அடியில்வருமாறு:—

பண்டொருகாலத்தில், பிரம்மா நித்திரை நீங்கி நித்யகர்மங்களை நிறைவேற்றி, உலகத்தைப் படைக்கத் தொடங்கியபோது, வேதங்களின் முறையை மறந்தமையால் அத்தொழில் கைகூடப்பெற்றிலர். அந்தோ! இதன்பொருட்டா சிவயோகம் பயிலும், பொது துயில் உண்டாயதென்று பிரம்மா வருந்தி, மத்திய கைலாய மலையைச்சார்ந்து, தேவதேவரை வணங்கி, சிறியேன் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அதற்கு மகாதேவர், "தட்சிணகைலாயமாகிய பேரூரிலே அரசமர மூலத்தின் கண்ணதாகிய இரஜதசபை (வெள்ளியம்பலம்) யிலே நமது தாண்டவத்தை வேண்டித் திருமால் கோமுனிப் பெயர் கொண்டு, காலவமுனிவனோடு கலந்து தவம் புரிகின்றனன். காமதேனு வழிபட்டமையால் 'நமக்குப்' 'பட்டிநாதர்' என்று பெயர்வந்தது. ஆகையால், நீ பட்டிமுனியாய் அத்தலத்தே சென்று பக்தி செய்வாயாகில், நமது நடனத்தையும் கண்ணுற்று, எண்ணுற்ற வரம்பெறலாம்." என்று திருவாய் மலர்ந்தனர். பிரம்மதேவர் அரிதில் விடைபெற்று, திருவைந்தெழுத்தைச் சிந்தித்து, விபூதியணிந்து உருத்திராக்க வடம்புனைந்து, குழைந்த உள்ளத்தோடு தவசித்திபுரத்தைச் சார்ந்து, காஞ்சிமாநதியில் நீராடி, சிவபெருமானை மெய்யன்புடன் வணங்கிப் பன்னீர் மாத்தடியிலே குடிகொண்டருளும் மூல லிங்கத்திற்கு வடக்கு திக்கிலே தமது கமண்டலத்தைத் தீர்த்தமாகப்பெருகச்செய்து சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து, அபிஷேகித்து, அருச்சித்து, வெள்ளியம்பலத்தையும் தரிசித்து, காலவமுனிவர், கோமுனிவர் இருவருடன் கலந்திருந்தனர். இங்ஙனம் இருந்துவருகையில், காஞ்சிநதியின் வடதிசையில், முத்தியைத்தரத்தக்க ஒரு யாகம் வளர்த்துச் சிவபெருமான் களிகூறும்படி முற்றுவித்தார். பிரம்மதேவர் ஆலயத்திற்கு "வடகயிலை" என்றும், தீர்த்தத்திற்கு "பிரம்மதீர்த்தம்", "குண்டிகைதீர்த்தம்" என்றும் யாககுண்டத்திற்கு "திருநீற்றுமேடு" என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன.

இப்பிரம்ம தீர்த்தம் ஓர், கிணற்றுவடிவில் இவ்வாலயத்துள்ளிருக்கிறது. இதன் நன்னீர் செம்பின் களிம்பை நீக்கும் சக்திவாய்ந்தது. இங்ஙனம் செம்பின் களிம்புநீக்கும் தன்மையை நன்கு பரீட்சித்தறிந்தவர், கோயமுத்தூர் தலவாசியும், சிவநேசருமாகிய திருவாளர். சி. கே. சுப்பிரமணியமுதலியார் B. A. அவர்கள். பெருமை பொருந்திய இப்பிரம்ம

நீர்த்தத்தில் கால், அரை, முக்கால் முழுமண்டலங்கள் அதாவது 12, 24, 36, 48 நாட்கள் தொடர்ந்தாப்போல் நீராடுகின்றவர்கட்கு பிரமை, புத்திசுவாதீன மற்றிருத்தல் முதலிய சம்பற்றிய நோய்களும்; குட்டம், பெருவியாதி, வாதம், குன்மம், தொழுநோய், காசம், கண்ணோய், மூடம், வயிற்று நோய் முதலிய பிணிகளும் ; பேய், பிசாசு முதலிய பீடிதங் களும் நீங்கி, இஷ்டகாமியங்கள் இனிதுறப்பெற்று இன்பமடைகின்றனர். மேற்கூறிய நோய்கள் இத்தீர்த்தத்தால் நீக்கப்படுகின்றனவென்பது பேரூர்ப்புராணம் தீர்த்தப்படலம் 39, 40 ஆம் கவிகளால் அறியப்படுகின்றன. அச்செய்யுள்கள்:—

"வடகயிலாயத் தெல்லை வயங்கிய பிரம்ம தீர்த்தங்
கடன்முறை மூன்று பக்கங் காதலினொடி யுள்ளும்
படர்தாப் பருகினோர்க்குப் பகர்ந்தகான் மலடு நீங்கு
மடர்தருபூத மண்ணையாதியி னலைப்புந் தீரும்"

"குட்டநோய் பெருநோய் வாதங் குன்மநோய் தொழுநோய்காச
முட்டிய சலநோய் கண்ணோய் முயலகன்மூட நோய்மற்றுங்
கட்டழற்கதிய பஞ்சிற் கணத்திடை யனுங்குஞ்சால
விட்டகாமியங் களெல்லா மெளிதின் வந்திண்மென்றே"

என, வருவனவாம்.

இப்பிரம்ம தீர்த்தத்தைச் சிலர் "இறங்காக்கிணர்" எனவுங்கூறுவர். வட்டவடிவமா யமைந்த இக்கிணற்றுநீரை, எவ்வளவு இறைத்தாலும் குறைதலின்றிச் சுரந்துபெருகு கின்றது.

இவ்வாலயமும் இத்தீர்த்தமும் மிகப்பழுதுபட்டு ஜீர்ண தசையிலிருந்ததைக் கோய முத்தூர் வழக்கறிஞரும், சிவநேசச் செல்வருமாகிய சி. கே. சுப்பிரமணியமுதலியாரவர்கள் தமது சொந்தப்பொருப்பில் ஜீர்ணோத்தாரணஞ்செய்து, புதிதாக ஆலயவாயிலுக்கு எதிரில் அன்பர்கள் மழை வெயிலுக்கொதுங்குதற்குக் கற்றூண் நிறுத்திக் கல்விக்கோட்டை ஓடு வேய்ந்த கொட்டகையிட்டும், தரையைச் சாந்திட்டு மெழுகியும், நீர் இறைப்பதற்குத் தோண்டி, கயிறுடதவியும், சுற்றுமதிலிட்டும், ஆலயத்துள் நூதனமாக விநாயகப்பிரதிஷ்டை செய்வித்தும் நன்மை தேடியுள்ளனர். அப்பேரறிவாளரைப் பெரிதும் பாராட்டுகின்றோம்.

காலவேச்சுரம்.

——"சற்றேனும்
மாலவ னுக்காணு மலர்த்தாள் கண்டர்ச்சித்துக்
காலவனூர் முத்திகலந்த தலம்
(கின்னவிதோது)

இத்திருக்கோயில், வடகயிலாயத்திற்கு நேர்கிழக்கில் சுமார் 100 கஜ தூரத்திலும், கன்னிமேட்டுக்கு மேற்கிலும், ஸ்ரீ நாகரத்தினக் குருக்கள் வீட்டிலிருந்து வடபுறம் காஞ் சிமாநதிக்குச் செல்லும் நடைவழியிலும் இருக்கிறது. வடகயிலாயத்திலும் சற்று போ

லயம். இவ்வாலயத்தின் முன்மண்டப மேல்தளத்தின்மீது செங்கல்லாற் செய்து சாந்து பூசப்பட்ட பெரிய ரிஷபமொன்று அழகிய வுருவத்துடன் கம்பீரத்தோற்றத்தில் படுத்திருக்கும் பாவனையில் அமைக்கப்பட்டிருக்கிறது. இவ்வாலயம், காசிபமுனிவர் புதல்வர், காலவமுனிவரால் எடுப்பிக்கப்பட்டதாகத் தலபுராணங்கூறுகிறது. அவரானே சிவலிங்கப்பிரதிஷ்டையும், தம்பெயரால் தீர்த்தமொன்றும் நிறுவப்பெற்றதாக அறியப்படுகிறது. அருட்குறியாகிய சிவலிங்கமும், ஆவுடையாரும் பேருருவில் அமைந்து மங்கலான சென்னிற வுருவத்தில் விளங்குகிறது. இவ்வாலயம் இவராலேயேயெடுக்கப்பட்ட உண்மை அம்முனிவர் பெயராகிய "காலவேச்சுரம்" என்ற பெயராலே வழங்கப்படுவதால் அறியலாகும். ஒரு சிலர், இதனை "அரசம்பலவாணர் ஆலயம்" என்றும், சின்னக்கோயில்" என்றும் கூறுகின்றனர். ஆலயத்திற்குப் பின்புறமுள்ள காலவதீர்த்தத்தில் விதிப்படி மூழ்கிப் பெருமானை உள்ளன்போடு வழிபடுகின்ற அன்பர்களுக்கு, நினைத்த காரியங்கள் நிறைவேறிச் சகலபாவங்களும் நீங்குவதாகக் கூறப்படுகின்றது.

காலவேச்சரத்தின் திருமதிலுக்கு வடபுறம் அரசமரம் :ஒன்று பெரிதாய், உயரமாய் ஓங்கி வளர்ந்திருக்கிறது. இதுவும் 'தலவிருக்ஷம்' எனக்கூறுகின்றனர். மரங்களுக்கு அரசாகிய இவ்வரசவிருக்ஷம், மும்மூர்த்தி சொரூபமுடையதென்று புராணங்கூறுகின்றது. இவ்வரச விருக்ஷத்தினடியில் ஆனைமுகக்கடவுள் அமர்ந்திருக்கின்றனர்.

இவ்வாலயத்தின் வரலாறு தலபுராணத்தில், அடியில் வருமாறு கூறப்படுகிறது: காசிபமுனிவர் புதல்வராகிய காலவமுனிவர், சிவபுண்ணியமேலீட்டினால், இருவினையொப்பும் மலபரிபாகமும்.சத்திநி பாதமும் அடைந்து, பாசத்தையும், பாசத்தையுடைய பசுவையும், பசுவுக்குப்பதியாகிய சிவபிரானையும், தமது மதிநுட்பத்தினாலே ஆராய்ந்து, பதியை அடைதற்குரிய நெறி, சிவலிங்கோபாசனையே என்றும், அவ்வுபாசனை எளிதிற் கைகூடுதற்குரியதலம் பேரூரே என்றும் உணர்ந்து, அத்திருப்பதியை அடைந்து, காஞ்சிநதியில் மூழ்கி, சுவாமிதரிசனஞ்செய்து அவ்வாற்றங்கரையிலேயே சிவலிங்கப் பிரதிட்டைசெய்து ஒரு தீர்த்தம் அகழ்ந்து, அந்நீரை அபிஷேகித்து அருச்சனைபுரிந்து, நாடோறும் பஞ்சாட்சரம் பதினையாயிரம் உரு ஜபித்து வந்தார். இங்ஙனம் நீண்டகாலம் தவஞ்செய்யும்போது அவ்வருட்குறியினின்றும் சிவபிரான் தோன்ற, அவரைக் காலவர் வழிபட்டு, வரங்கள்பெற்றுத் தீட்சையுற்று, நிட்டை கூடி, வெள்ளியம்பலத்திருக்கூத்தரையும் தரிசிக்க, விரும்பியிருந்தனர். அப்பொழுது கோமுனிவரும், பிறரும், காலவேச்சரத்தில் அரசவிருக்கத்தடியில் வெள்ளியம்பலம் உள்ளதாகச் சிவபெருமான் அருளியபடி, அதனைக்காணப்பெற்றிலோமென்று வருந்தினர். அவர்களில் கோமுனிவர், எம்பெருமானை அவ்வெள்ளியம்பலத்தைத் தோற்றுவிக்குமாறு பிரார்த்தித்தனர். அப்பொழுது பழைய "அரசம்பலத்தைப்பரமசிவன் மறைத்தபடியால், அவ்விடத்தே ஒரு சபையும், அச்சபையின் நடுவே நடராஜர் திருவுருவமும் அமைத்து வழிபடுவாயாக" என்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. உடனே கோமுனிவர், விசுவகம்மியனை அழைத்துச் சபைநிருமிக்கும் இடம் புலப்படாமல் திகைக்கும்போது, சிவபிரான், சித்தாகத்திருவுருக்கொண்டு பற்பல அற்புதங்களைச் செய்தருளினர். அவர்பால் கோமுனிவர் முதலிய மூவரும் அடுத்துச் சிவபெருமான் திருநடனஞ்செய்

தருளுகின்ற திருச்சபையைத்தெளிவிக்க வல்லீராயின், நீவிரே முற்றுமுணர்ந்த பெற்றி யர் எனச்சொல்லிய அளவில், சித்தேசர் ஆதிலிங்கமூர்த்திக்கு வடகிழக்கில், திருமூர்த்தி யுருவமான அரசடி நீழலில் வந்து, "இரசதசபை எழுக" என்று கூறினர். அக்கணமே வெள்ளியம்பலம் பொன்னென மேலெழுந்தது. அது கண்டதேவர்களும், கற்பகப்பூமாரி பொழிந்தனர். அது காலை கோமுனிவர் முதலினோர், சித்தமூர்த்தியை வணங்கி, தேவரீர் செய்தருளிய தெய்வசபைக்கேற்பத் தேவர்பிரான் திருவுருவஞ் செய்தருளுவீராக என்ற போது, சித்தேசர் திருவுளமகிழ்ந்து, திருச்சபையைச் சூழத் திரைபோடச்செய்து, அத னுள்ளே ஒரு முகூர்த்த காலநேரம் அமர்ந்து, இரண்டாம் முகூர்த்தத்திலே திரையோடு சித்தேசர்; கட்புலனுக்கு எட்டாவண்ணம் திருவுருக்கரந்தனர். பின்னர், திருநடராஜர்திரு வுருவோடு சிவகாமி அம்மை திருவுருவையும், அத்திருச்சபையிலேயே கோமுனிவர் முத லிய மூவரும், தேவர்கள் யாவரும் தரிசித்தார்கள். அதன் பின்னர், அம்முனிவர் மூவரும் சிவாகம விதிப்படி சம்புரோக்ஷணஞ்செய்து, ஸ்ரீ நடராஜரோடு சிவகாமி அம்மையை யும், தினந்தோறும் ஆறுகாலம் ஆராதனம் செய்து இன்புற்றனர்.

இக்கோயிலில் முகூர்த்தங்கொண்டருளும கடவுளுக்குப்பெயர்—'அரசம்பலவா ணர்' தேவியார் பெயர்—'அகிலாண்டநாயகியார்' நியமந்தவறாது இருவேளையும் திருவாரா தனம் கிரமமாக நடைபெற்றுவருகிறது. ஆண்டுதோறும் சித்திரைத்திங்களில் பிரம்மோற் சவம் சிறப்பாகக் கரூர் சிவநேசச்செல்வி, ஸ்ரீமதி, மீனும்பிகை அம்மையார் என்பவர், சொந்தச்செலவில் நடைபெற்றுவருகிறது. இவ்வாலயத்தை நன்றாகச் செப்பனிட்டுத் திரு மதில் எடுப்பித்தும், தரைக்குக் கற்களால் தளவரிசை செய்வித்தும் தேவர், தேவியர் அமர்ந்தருளும் : ஆலயங்களுக்கு பிராகாரமண்டபம் கோவியும் நன்மைசெய்தவர் மேற் கூறிய மீனும்பிகை அம்மையாரே ஆவர்.

அழகிய சிற்றம்பலம்.

......"நன்றுணர்ந்த
தில்லை முனிவோரழகு சிற்றம்பலஞ் செய்திங்
கெல்லையறு பூசை யியற்று தலம்.
(மின்னலிடுது)

இவ்வாலயம் மிகச்சிறிது. காலவேச்சுரத்திற்குத் தெற்கிலும், செங்குந்தர் மடால யத்திற்குக் கிழக்கிலும், ஸ்ரீ நாகரெத்தினக் குருக்கள் வீட்டுவெளிமுற்றத்திலுமாகத் தற் காலம் இவ்வாலயம் உள்ளது. இச்சிற்றாலயத்தை எடுப்பித்து, சிவலிங்க அருட்குறி தாபித்து, "அழகியசிற்றமபலம்" என்று பெயர்சூட்டி பிரசித்திபெற வணங்கியவர், "தில் லைமூவாயிரவர்" என்ற அந்தணச்ரேஷ்டர்களாவர். இவர்களால் இவ்வாலயம் எடுப்பித்து வணங்கப்பட்டமை, தலபுராணம் அழகியசிற்றம்பலப்படலத்தால் அறியப்படுகிறது. அவ்வாலாறு அடியில்வருமாறு:—

'வன்றொண்டர்', 'தம்பிரான்றோழர்', ஆரூரடிகள்' என்ற திருப்பெயர்கள் புனைந்து, சமயாசார்யர் நால்வரில் ஒருவராய ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர், சிவபெருமான் அடியார்

கள், பொருட்டுக் கோயில்கொண்டருளும் திருத்தலங்கள் தோறுஞ்சென்று தரிசித்து கொங்குநாட்டுப் பேரூரடைந்து, பிறவாநெறியளிக்கும் பெருமானைத் தரிசித்து, அவா தம்பொருட்டுச் செம்பொன் அம்பலத்து நடித்த திருநடனத்தையும் சேவித்து, விடை பெற்றுச் சோழநாடு புகுந்து, தில்லைத்தலம் எய்திச் திருச்சிற்றம்பலத்திலே திருநடனம் புரிந்தருளும் நடனசபாபதியைத் தரிசிக்கையில், அக்கோலம், தம்பொருட்டுத் திருப்பே ரூரில் காட்டிய திருக்கோலமாகவே யிருத்தல் கண்டு அதிசயித்து, அதனைத் தமது தேவா ரத்தில்,

"ஆரூரன் தம்பிரானாரூரன் மீகொங்கில்
அணிகாஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே
பெற்றாமன்றே" (கோயில்பண்-குறிஞ்சி)

என்று சுட்டிப் பாடியருளினர்.

அத்திருத்தேவாரத்தை ஊன்றிக் கவனித்த தில்லைவாழ் அந்தணர், மிகவியந்து நாயனாரை நோக்கி, இத்தலம்போல் இவ்வுலகத்திலே ஒரு தலம் உண்டா? அப்படிக் கிருக்க, இதினும் சிறந்த ஒருதலம் இருப்பதாகக் கூறியதென்னை? யென்று வினவினர். இவ்வினாவுக்கு இத்தில்லைத்திருமன்றத்திலே சிவபிரான், திருத்தாண்டவம் செய்தருளுவது போலவே, கொங்குநாட்டு மேலச்சிதம்பரத்தில், பொன்னம்பலத்தில், சபாநாதர், திரு நடனஞ் செய்தருளுகின்றனர். அப்பேரூர்த் தலத்தில் அன்பர்கட்கு இறைவன், முத்தி வீடு தருவதன்றி, தருமார்த்தகாமங்களைத் தருவதில்லையென்று, அடிகள் விடையிறுத்த னர். அதுகேட்ட தில்லைவாழந்தணர், அப்பொழுதே பிரயாணப்பட்டு, கொங்குநாட்டுத் திருப்பேரூரடைந்து, காஞ்சிமாநதியில் மூழ்கி, ஐந்தெழுத்தோதி, அரன்நாமம் நவின்று, அப்பரையும், அம்மையையும் விதிப்படி வணங்கித்தொழுது, மறுநாள், காலவேச்சுரத் திற்கு அக்கினிதிக்கிலே ஆலயம் ஒன்று எடுப்பித்து, அதில் அருட்குறியாகிய சிவலிங் கத்தை எழுந்தருளுவித்து அவ்வாலயத்திற்கு 'அழகியசிற்றம்பலம்' என்ற திருப்பெயர் சூட்டி அன்புற வணங்கினர். பின்னர், கனகசபையிற்சென்று திருநடனம் புரியும் சிவபிரா னைச் சேவித்து விடைபெற்று, தாம்வசிக்கும் திருத்தில்லை சேர்ந்து, பண்டுபோல் வாழ்த் திருந்தனர்.

இத்திருக்கோயில், தற்போது, நிரம்ப ஜீர்ணதசையுற்று அழியும் நிலைமையிலுள் ளது. இதன் பெருமையுணர்ந்து தரிசனார்த்தம் வரும் அடியார்கள், இந்நிலைகண்டு மிகவ ருந்தித் துயருறுகின்றனர். சுருங்கிய செலவில் தமது சொந்தப்பொறுப்பில், அருட்குறியா கிய சிவலிங்கம், அசுத்தப்படாமலும், வெயில், மழை முதலியவைகளால் காயாமலும், நனை யாமலும் மாத்தால் ஒரு ஆவரணம்போட்டு புண்ணியந்தேடிய திருவாளர் சி. கே. சுப்பிரம ணியமுதலியாரவர்களைப் பெரிதும் பாராட்டுகின்றோம். பழுதுபட்டு நிரம்பக்கேவல நிலையி லுள்ள இத்திருக்கோயிலை, இப்பொழுது, இத்தலத்தில் சிவாலயத்திருப்பணிகள் செய்து வரும் திருவளர் செல்வர், P. சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள் அழகுபெற ஜீர்ணோத்தார ணஞ்செய்து, அவ்வாலயத்தின் பெயருக்கேற்ப, அழகியசிற்றம்பலமாக, உருப்பெறச்செய்

ஆ. அழகிய சிற்றம்பலமுடையார் பெருங்கருணைக்குப் பாத்திரமாவார்களாக.

இவ்வாலயத்தின் பின்புற மதிற் சுவற்றில், சில கல்வெட்டுக்கள் இருக்கின்றன.

மாதேச்சுரர் ஆலயம்.

இவ்வாலயம், பட்டிநாதர் ஆலயத்திற்கு எதிரிலுள்ள திருக்குளத்தின் கீழ்க்கரையிலிருக்கிற மிகவும் சிற்றாலயம். தலபுராணத்தில் இவ்வாலயம்பற்றி யாதும் கூறப்படவில்லை. பிற்காலத்தில் ஏற்பட்டது போலும். பங்குனிமாதம் நடைபெறும் பிரம்மோற்சவத்தில் 9-ம் நாள் தெப்பத்திருவிழாவின்போது, சிவபெருமான் இவ்வாலயத்தில் எழுந்தருளி மண்டபக்கட்டளைகொண்டருள்கின்றனர். சிவபெருமான் இவ்வாலயமண்டபத்தில் எழுந்தருளி, காட்சிதரும் சிவபுண்ணியத்தை ஏற்றுக்கொண்ட கண்ணியர், மைசூர் அரசப் பிரதிநிதியாக 12 ஆம் நூற்றாண்டின் இறுதியில் கோயமுத்தூர்ப் பிரதேசத்தை அரசு புரிந்த 'மாதோராஜா' என்று தெரியவருகிறது. இவராலேயே இவ்வாலயமும், அவ்வாலயத்தையொட்டியுள்ள திருக்குளமும், எடுப்பிக்கப்பட்டதாக அத்திருக்குளத்தின் படிக் கட்டுகளில் வெட்டப்பட்டிருக்கும் சாஸனங்களால் அறியப்படுகின்றது. சில பெரியார், திருக்குளமும், மாதேச்சுரர் ஆலயமும், மைசூர் அரசப் பிரதிநிதி மாதோராஜா அவர்கள் திருப்பணியென்றே கூறுகின்றனர். இம்மாதோராஜா, கோயமுத்தூரில் மைசூர் அரசர் பிரதிநிதியாகவிருந்தனர் என்பதற்கு அடையாளம், கோயமுத்தூர் ராஜவீதியில், கோனியம்மன் தேர்நிலைக்கெதிரிலுள்ள பெண்பாடசாலைக்கட்டிடம் மாதோராஜா அரண்மனையென்றும், அத்தெருவிற்கு 'மாதோராஜா மஹால் தெருவு' என்றும் பெயர் வழங்கி வருவதே போதிய சான்றாம்.

தேன் கயிலாயம்.

இது பட்டிப்பெருமான் திருவிழாக் காலத்தில் பவனிக்கு எழுந்தருளும் திருவீதிகள் நான்கில், தெற்குத் தெருவின் தென்கோடியில் இருக்கிறது. இது காத்தற்கடவுளாகிய திருமாலால் எடுப்பித்துச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வணங்கியதாகத் தலபுராணங்கூறுகிறது. மிகச்சிற்றாலயம். மிகவும் ஜீர்ணப்பட்டுக் கேவலநிலையிலிருந்ததை சிவநேசமிக்க அன்பர் ஈ. திருவாளர் செம்பருத்திக் கவுண்டரவர்கள் தமது சொந்தச் செலவில் ஜீர்ணோத்தாரணஞ் செய்துவருகின்றனர். சக்கரதீர்த்தம் இவ்வாலயத்துள் இருக்கிறது. இதுவும் திருமாலால் நிர்மிக்கப்பட்டதாம். பராமரிப்பின்மையால் தீர்த்தம் தூர்ந்துபோய் ஸ்நானயோக்யமின்றிப் பாழ்பட்டுக் கிடக்கிறது. இனி இவ்வாலயமும், தீர்த்தமும் ஏற்பட்ட வரலாறு புராணத்திற் கண்டபடி அடியில் வருமாறு:—

"பிறவாநெறித் தலமாகிய திருப்பேரூரில், ஸ்ரீ சிவபெருமான் தமது அருட்சக்தியாகிய உமாதேவியார் காண ஆனந்தத் தாண்டவம் செய்தருளுவது போல, தில்லையெனும் சிதம்பரத்திலும், சிவகாமவல்லியார் கண்களிப்பத் திருநடனஞ் செய்தருளுவர். அத்திரு நடனத்தைக் காணப் பேரவாக் கொண்ட வியாக்கிரபாதர் (புலிக்கால் முனிவர்) தில்லை சேர்ந்து, சிவபெருமானை மெய்யன்புடன் வணங்கித் தொழுது, சிவயோகத்தமர்ந்திருந்த

னர். அப்பொழுது, கர்மமே மேம்பட்டது என்னும் கொள்கையுடைய தாருகாவனத்து முனிவர்களைத் தடுத்தாட்கொள்ளத் திருவுளங்கொண்ட தேவதேவர், கங்காளவுருவங் கொண்டு, அம்முனிவர் மனைவிகள் வசிக்கும் ஆசிரமங்கட்குச் சென்று, அவர்கள் நிலை கலங்கி மனந்தடுமாறும்படி செய்தும், சிவாக்ஞைப்படி விண்டுதேவர் மோகினியுருக் கொண்டு அழகின் வடிவுநலத்தால் அம்முனிவர் தவநிலையைக் கெடுத்துக் கருவபங்கப் படுத்தியும், ஆனபின்னர், அவ்வனத்தின்கண்ணே சிவபெருமான் திருத்தாண்டவம் புரிந்த ருளினர். அந்நிர்த்தனத்தைத் தரிசித்த திருமால் களிப்படைந்து, வைகுண்டம் சேர்ந்து ஆதிசேடன்மீது பள்ளிகொண்டு, யோகநித்திரை செய்கையில், ஒரு நாள் கண்விழித்துத் தாம் முன்கண்ட நடனக்காட்சியை நினைந்து வியந்தபோது, அவரது திருக்கண்களினின் றும் ஆனந்தபாஷ்பம் பொழியவும், உரோமஞ்சிலிர்க்கவும், அன்புததும்பவும் சங்கரா! சங்கரா! கங்காதரா! என்று வாய்மலர்ந்து கூறிப்பேரானந்தமுற்றனர்.

இது கண்ட பாம்பின் தலைவன், திருமாலை வணங்கித்தேவரீர் இவ்வாறு வாய்விட் டரற்றி ஆனந்தமுற்றதின் காரணத்தைத் திருவாய்மலர்ந்தருள வேண்டுமென இறைஞ் சினர். தாமோதரன், தாருகாவனத்தில் சிவபெருமான் நிகழ்த்திய நடனத்தின் அற்புதக் காட்சியை நினைக்க, இவ்வானந்தம் மேலிட்டதென அறிவித்தனர். அது கேட்ட ஆதி சேடன் தானும் அத்திருநடன வைபவத்தைக்கண்டு களிக்க அவாமேற்கொண்டு ஆழி யேந்திய அண்ணலிடத்து அஞ்சலிசெய்து விடைபெற்று மேருமலையைச்சார்ந்து தவஞ் செய்தனன்.

தவத்திற் குவந்த சங்கரன் எதிர் வந்து, தில்லையம்பலத்தைச் சென்றடையும்படி அருள்புரிய, ஆதிசேடன் அவ்வாறே பதஞ்சலி முனிவராக அவதரித்துத் தில்லையம்பதியில் வியாக்கிரபாத முனிவரோடு கூடி ஆனந்தத்தாண்டவத்தைத் தரிசித்தனன். இதனை அறிந்த திருமால், தாமும் தில்லையின்கண் சிவபெருமான் நடிக்கும் ஆனந்தத் திருநடனத்தைக் கண் டுகளிக்க, வைகுண்டம் நீங்கித் திருக்கைலாயமலையைச்சேர்ந்து, சிவபெருமானைத் திரிகா ணங்களாலுஞ் சேவித்துத் திருச்சிற்றம்பலத் திருநடனத்தைக் காணவேண்டுமென்னும் பேரவாவைப்பெருக்கமுடன் விண்ணப்பித்தனர். அது கேட்ட கயிலைக்கிறைவர் களிப்புற் று, விராட்புருடனுக்கு இருதயஸ்தனமாகிய கிழச்சிதம்பரத்தை பதஞ்சலி, வியாக்கிரபாதர் பொருட்டுச் சுதந்தரமாக்கினேம். ஆதலால், தட்சிணகைலாயமாயும், விராட்புருடனுக்கு விந்துஸ்தானமாயுமுள்ள மேலச்சிதம்பர நடனத்தைக்காலவமுனியும், காமதேனுவும் கரு தியிருத்தலான், நீயும் கோமுனி என்னும் பெயர் புனைந்து, மேலச்சிதம்பரமாகிய பேரு ரைச்சார்ந்து வதியின், அங்கே வெள்ளியம்பலத்தில் திருநடனஞ்செய்து காட்டுவோம். தரிசிக்கலாமென்று திருவாய்மலர்ந்து விடைகொடுத்தனர். விடைபெற்ற வாசுதேவன், கோமுனிவர் உருக்கொண்டு மரவுரியும், சடைமுடியும் தரித்துத் திருநீறும், கண்டிகையும் புனைந்து, திருவைந்தெழுத்தையும் சிந்தித்துக்கொண்டு, ஆதிபுரியை அடுத்துக் காஞ்சிநதி யில் மூழ்கி, விதிப்படி நியமமுற்றித் தேவர்தேவரையும், தேவியையும் சேவித்து, மற்றும் ஆலயங்களையும் இராஜசபையையும் வணங்கி, பின்னர், சிவபெருமான் திருக்கோயில் கொ ண்டருளும் ஆலயத்திற்குத்தென்றிசையில் ஓர் ஆலயம் எடுப்பித்து, அதற்குத் 'தென்

கைலாயம்' என்று திருப்பெயரிட்டு அருட்குறியாகிய சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து, சக்கர தீர்த்தம் எனப்பெயரிய ஒரு தீர்த்தம் அகழ்ந்து, அந்நீரை அருட்குறிக்கு அபிஷேகித்து சிவாகம விதிப்படி சிவாராதனஞ்செய்து, காலவமுனிவரோடு கலந்து சிவயோகத்தமர்ந்திருந்தனர் என்பதே.

## பஞ்சகிரிகளும்—இடமும் பெயர்களும்.

பஞ்சகிரிகள் என்பது, ஐந்து மலைகள் எனப்படும். இம்மலைகள்—தென்கயிலாயம் என்னும் வெள்ளிமலை, வடிவேற்காத்தன் இனிதமர்ந்துறையும் மருதமலை, சத்திகிரி என்னும் குருவவிருடிமலை, பிரம்மகிரி என்னும் அய்யாமலை, நீலகிரி என்னும் விண்டு மலையும் ஆம். இவ்வைந்து கிரிகளுள் வெள்ளிமலை, மருதமலை, குருவவிருடிமலை ஆகிய மூன்றும், திருப்பேரூருக்கு நேர் மேற்கில், வெள்ளிமலை 15 மைலினும், வடகிழக்கி லுள்ள மருதமலை 7 மைலினும், வடக்கிலுள்ள குருவவிருடிமலை 10 மைலினும் இருக்கின்றன. அழகுடைய இம்மூன்று கிரியும், இயற்கையிலேயே ஸோமாஸ்கந்தமூர்த்தமாக இனிதமைந்திருப்பதை யாவரும் காணலாம். வெள்ளிமலைக்குத் தென்பால் பிரம்மகிரியும், குருவவிருடிமலைக்கு வடபால் விண்டுகிரியும் உள்ளன. பஞ்சகிரி எனப்படும் இவ்வைந்து மலைகளில் வெள்ளியங்கிரியும், மருதகிரியும், திருப்பேரூர் ஸ்தலபுராணத்திலும், குருவவிருடிமலை தடிசைப் புராணத்திலும், அருணகிரிநாதர் திருப்புகழிலும், புகழ்ந்து பாராட்டப் பெற்றிருக்கின்றன. விண்டுகிரிக்கும், ஐயாமலைக்கும் புராணங்களிருப்பதாகத் தெரியவில்லை. விண்டுகிரிக்கு மட்டும் 'பெருமாமுடி' என்ற பெயர் விளங்குவதோடு அம்மலையில் ஒரு கோட்டையும், இனிய நீர்ச்சுனையும், அமைந்திருப்பது முன் ஒரு காலத்தில் இம்மலை ஓர் சிற்றரசன் ஆதிக்கத்தில் சிறந்து பெருமை பெற்றிருக்க வேண்டுமென்பதை நினைப்பூட்டுகின்றது. இம்மலையில் வாழையும், கமுகும் யதேஷ்டம். 'நாடுகண்டபோழி' என்று இம்மலையின் பிரதேசத்திற்குப் பெயர் வழங்கப் படுகிறது.

இக்கொங்குநாட்டில் பிரசித்திபெற்ற மலைகளுள், வெள்ளியங்கிரி மிகச் சிறப்புற்றது. யாவரும் வணங்கும் பெற்றியது. மலைவளஞ்சிறந்தது. எம்பெருமான் இனிதமர்ந்துறைவது. பஞ்சலிங்கங்கள், இப்பெருமலையின் மத்தியபாகத்தில் இருண்ட குகையுள் கோயில் கொண்டிருக்கின்றன. இக்கிரி, ஏழு பெருங்குன்றுகளைத் தன்னுட்கொண்டு எழுநிலைக் கோபுரம் போல் இனிது விளங்குகிறது. இவ்வெள்ளிய வெற்பு, பனியாலும் வெள்ளியமேகத்தாலும் சூழப் பெற்றிருப்பது, ஏகாந்தகாலப் பெரும்பிரளயகாலத்தில் மயானத்தின்கண் முழுநீறுபூசித் ஆநந்தத் திருநடனம் செய்தருளும் சிவபிரானைப்போல் தோன்றுகிறது. தொடர்ந்த அறு பெருங்குன்றுகளும், நிலவொளியிற்காணும் காட்சிகள்போலச் சிவயோகிகள் ஞானவெளிச்சத்தாற்காணும் மூலாதாரமுதலிய ஆதாரங்கள் போல விளங்குகின்றன. இவற்றின் இடையில் காணப்படும் காடுமேடும், குறுக்கும் நெடுக்கும், செங்குத்தான வழிகளும், தொண்ணூற்றாறு தத்துவங்கள் போன்றிருக்கின்றன. அம்மட்டோ! இப்பெருங்கிரியுள் எண்ணற்ற அரிய பல தருக்களும் அதிசய ஔஷதிகளும் இனிய நீர்ச்சுனைகளும் நிரம்பப் பெற்றிருக்கின்றன. "காஞ்சிமாநதி" "நொய்யல்" என்று வழங்கப்படுகின்ற இக்கொங்கின் புண்யநதியும், இங்கிருந்தே உற்பத்தி

யாய்ப் பெருகி வழிகின்றது. எம்பெருமானது ஐந்து சிவலிங்கமூர்த்தங்களும், தெய்வீகச் சிறப்புக்களும், சிவசொரூபமும் அமைந்த இத்திருமலையின் சிறப்பை யாரே எடுத்தோத வல்லார்.

மருதகிரி—குன்றுதோருடல்களுள் ஒன்ருய்க் குமாரக்கடவுள் கோயில் கொண்டருளும் திருமலை. இத்திருமலை குமாரக்கடவுள் திருவுருவம்போன்றதென்றும், இவ்வடிவினை விண்டுதேவர் பூசித்து இஷ்டசித்திபெற்றனரென்றும், பேரூர்த்தலபுராணங்கூறுகின்றது. வானளாவிய மருதவிருக்ஷத்தின் வேரினின்றும், இனிய நன்னீர், வற்ருப்போறுபோல் சுரந்து, பெருக்குடன் தண்ணிய நீர்நிலயமாய் நிலைபெற்றுத் தன்னில் மூழ்குவோரது பாவங்களைப்போக்கி இன்பமூட்டுகின்றது. இப்புனிதச்சுனையை 'அருச்சுனதீர்த்தம்' எனப்பெயர் வழங்குவர். இவ்வருஞ்சுனையைப் பெரும்பணஞ் செலவிட்டுச் செப்பஞ்செய்து ஆண்டவன் அருள் பெறும் நிமித்தம் வருகின்ற அடியார்களுக்குச் சௌகரியஞ் செய்யப்பட்டிருக்கின்றது. கருங்கல்கோயில். மலைமேல் பல திருமடங்கள் இருக்கின்றன. ஆலயப்பிராகாரமும், வெளிப்பிராகாரங்களில் தேரோடும் திருவீதிகளும் இருக்கின்றன. தைப்பூசத்திருவிழா முதன்மையுடையது. எஞ்சிய அற்பிசி கந்தஷஷ்டி, மாசக்கிருத்திகை சாதாரணமானவை. முன்னர் குறித்த அருச்சுன தீர்த்தமன்றி, கன்னிகை தீர்த்தம், அநுமத் தீர்த்தம், சரவணப்பொய்கை என்ற பல தீர்த்தங்களும் சுனைவடிவில் விளங்குகின்றன.

குருவவிருடிமலை:—இம்மலையும் மிகச்சிறப்புடையதெனத் துடிசைப் புராணங்கூறுகின்றது. கிரிச்சருக்கம் காண்க. குருவவிருடி தவஞ்செய்து பேறுபெற்ற இக்கிரியில் பல தருக்களும், ஒஷதிகளும், நிறைந்திருப்பதன்றிக் கந்ததீர்த்தம், அகத்தியதீர்த்தம், சந்திரநதி, விநாயகநதி, சிவதீர்த்தம், குருவவிருடி தீர்த்தங்களும் மிக மகிமையுடையனவாய் விளங்கி மூழ்கினோர்களைப் பரிசுத்தப் படுத்துகின்றன. இம்மலை துடியலூர்க்குப் பக்கத்தேயுள்ளது. இவ்வளவே பஞ்ச கிரிகளைப் பற்றிய வரலாறு.

## பாடல்பெற்ற திருப்பேரூரும்—வைப்புத்தலங்களும்.

திருப்பேரூர் என்னும் இத்திருத்தலம், மேலச்சிதம்பரம், பட்டீச்சுரம், பிறவாநெறி, ஆதிபுரி முதலிய பல திருப்பெயர்களையுடையது. தம்பிரான்றோழராகிய சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுருகன்பூண்டி, திருப்புக்கொளியூர், அவிநாசி, திருத்துடிசை முதலிய திருப்பதிகளை முறையே தரிசனஞ்செய்து பாடிப்பரவிப் பின், திருப்பேரூர் பட்டிப்பெருமானையும், பச்சைநாயகியாரையும் வணங்கித் தொழப்பேரூர் எழுந்ததாக, அவிநாசி, திருமுருகன் பூண்டி, பேரூர் முதலிய தலபுராணங்களாலும், ஸ்ரீ சுந்தரரது தேவாரப்பாடல்களாலும் அறியப்படுகின்றது.

சுந்தரமூர்த்திகள், திருப்பேரூருக்கு எழுந்தருளிக் கனகசபையை தரிசித்தபோது அவர் அங்கு, 'நித்தனர் தில்லைமன்றுள் ஆடிய கோலத்தைக் கண்கள் ஆனந்தநீர் சுரந்து பெருக்கெடுப்பக் கண்டார்' என்பது பெரியபுராணச் செய்யுளால் போதருகின்றது.

திருமுருகன்பூண்டியில், ஆறலைக்கும் வேடுவரால் கவரப்பட்ட தமது பொருளை

பலை மீட்டும் பெறத் திருப்பதிகம் ஓதியும், திருப்புக்கொளியூரில் கரும்கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லிப் பதிகம்பாடியும், அற்புதங்கள் நிகழ்த்திய அடிகளார், சிற்சபேசன் தில்லையுள் கூத்தாடிய திருக்கோலத்தைத் திருப்பேரூர்க் கனகசபையின்கண் கண்பெற்ற பேறுகத் தரிசித்தும், தமது அருந்தமிழ் ஆரங்கள் சூட்டி-அப்பெருமானைப் பேரன்புடன் பெரிதும் போற்றிப் பரவினர். அன்றியும், தமிழ்வேந்தர், தாம் செல்லும் தலங்கள் தோறும் பதிகம்பாடும் வழக்கப்படி திருப்பேரூரில் எழுந்தருளித் தரிசனம்செய்து ஆனந்தித்துப் பதிகம்பாடினாராவர். மற்றும், அவர் பாடிய ‘மடித்தாடும்’ என்ற தொடக்கத்துக் கோயில் தேவாரத்துள், இறுதி பத்தாவது,

“பாருருமாவல்கு லுமை நங்கையவள் பங்கன் பைங்கணேற்றன்
ஊரூன்றருமனூர் தமர் செக்கிவிடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆரூன்றம்பிரா னூரன் மீகோங்கி லணிகாஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே பெற்றாமன்றே”
(கோயில்-பண்-குருஞ்சி.)

என்ற பாசுரத்தில், பேரூர் நடனசபாபதியைத் துதித்திருப்பது இவ்வுண்மையை உறுதிப் படுத்துகின்றது. இவ்வாறு வேறுதலத்துத் தேவாரத்திலுங்கூட வைத்துத் துதிசெய்யும் பெருமைவாய்ந்த இத்திருத்தலத்தை, நாவலூர் நேரே கண்டபோது அவர்தம் நெஞ்சம் நீருயுருகிப் பரவசத்திலாழ்ந்தனர். இவைகளை ஆராய்வார்க்குத் திருப்பேரூர் தலத்தை பாடினாரென்பது நன்கு தெளியப்படும்.

மேலும், நமது நாவலர் பெருந்தகை, கண்டதுகண்டவாறே தமது தேவாரத்தில் அமைத்துப்பாடுவதை வழக்கமாகக்கொண்டவராதலால் பேரூர்ப் பெருமானைப் புலியூர்ச் சிற்றம்பலத்தே கண்டபொழுது, அக்காட்சியைத்தமது தேவாரத்தில் இனிதமைத்துப் பாடினாராவர். அதுபோலவே,

“சித்தனூர் தில்லைமன் றணின்றுடனிடிய கோலநேர் காட்டக்
கைத்தலங் குவித்துக் கண்களானந்தக் கலுழிநீர் பொழிதரக் கண்டார்”

என்ற சேக்கிழார் திருத்தொண்டர் புராணச்செய்யுட்பிரகாரம் நம்பிகள், புலியூர்ப்பெருமானைப்பேரூர்க்கனகசபையினிடத்தே கண்டபொழுது அக்காட்சியைக் கருங்கன்மனத்தையும் உருக்கும் தமது திருத்தேவாரப்பதிகத்தில் அமைத்துப்பாடியிருப்பர் என்பதே பொருத்தம்.

அங்ஙனம் ஆரூருடைய நம்பிகள் தேவாரப்பதிகம் இசைத்திருப்பின், அப்பதிகங்கள் எங்கே என்ற ஓர் கேள்வி பிறக்கும். அதற்கு அப்பதிகங்கள் இறந்துபோயின என்பதே பேற்ற விடை. நம்பியாண்டார் நம்பிகள், சிதம்பரத்தில் தேவாரங்களைக்கண்டு தேடியெடுத்தபோது தேவாரங்கள் எழுதப்பட்டிருந்த ஓலைகள் மிகப்பல செல்லரித்திருந்தன அங்ஙனம் செல்லரித்த சுவடிகளில் திருப்பேரூர்த்தேவாரப்பதிகங்களும் ஒன்றாயிருக்கலாம். அவ்வாறு இறந்து போயிற்றென்று ஊகிப்பதே பொருந்துவதாம்.

திருப்பேரூர் தலத்தில், நாயனர் தேவாரம்பாடினர் என்பதற்கு இன்னும் ஒரு திருஷ்டாந்தம் காட்டுகின்றோம்.

"ஆரூரத்தா வையாற்றமுதே யளப்பூ ரம்மானே
காரூர்பொழில்கள் புடைசூழ் புறவிற் கருகாவூரானே
பேரூருறைவாய் பட்டிப்பெருமான் பிறவா நெறியானே
பாரூர்ப்பலரும் பரவப்படுவாய் பாசூரம்மானே"

(ஊர்த்தொகை—பண்—பழம்பஞ்சரம்)

என்று தமது ஊர்த்தொகைத் தேவாரத்தால், தமிழ்வேந்தர், ஆங்காங்குச் சென்று தரிசித்துப் பதிகம்பாடிய தலங்களையே தொகுத்து ஊர்த்தொகையாகப் பாடிவைத்தாரென்றும், தாம் சென்று தரிசித்துப் பதிகம் பாடாத தலங்களை அதிற் சேர்க்கவில்லையென்றும், அவர் தமது ஊர்த்தொகையுள், பிறவாநெறித்தலமாகிய திருப்பேரூரைச் சேர்த்திருப்பதால், அப்பேரூரானது சுந்தரமூர்த்தி சுவாமிகளால் பாடப்பெற்றிருக்கிறதென்றும், வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றது.

ஆயின், ஒருசிலர், கொங்குநாட்டில், அவிநாசி, திருமுருகன்பூண்டி, பவாநி, திருச்செங்கோடு, கோடுமுடி, கரூர், வெஞ்சமாக்கூடல் என்ற சிவஸ்தலங்கள் ஏழுதானே பாடல்பெற்றன. அவ்வேழில் திருப்பேரூர் ஒன்றாகவில்லையே, அதனால்தான் பாடல்பெற்ற ஸ்தலமல்ல என்று கூறுகின்றனர். அதனைச் சிறிது ஆராயின், உண்மையுணரலாம்.

ஒவ்வொருநாட்டிலும், பாடல்பெற்ற திருத்தலங்கள் இவ் வளவினவென்று வரையறுத்த பெரியோர்கள் செல்லரித்ததுபோக, இப்போது பதிகமுள்ள தலங்களை மாத்திரம், கணக்கிட்டு 'கோங்கேழ்' கொங்குநாட்டில் பாடல்பெற்ற தலங்கள் ஏழு என்று கூறி, அவ்வேழில் இப்போது தனிப்பதிகம் இல்லாத திருப்பேரூரை உள்ளிடாது போயினர் என்பதாம். மற்றும், நாவுக்கரசர் தமது திருக்ஷேத்திரக்கோவையுள் 2-ஆம் திருப்பதிகத்தில், "பேரூர் பிரமபுரம்" எனவும், திருவீழிமிழலைத் திருத்தாண்டகம் 8-ஆம் திருப்பதிகத்தில் "ஆரூர்பேரூர்அழுந்தூருள்ளார்" எனவும் போற்றியருளப்பெற்றுள்ளன. ஆகவே, மேலே காட்டப்பெற்ற திருஷ்டாந்தங்களால் திருப்பேரூர் "பாடல்பெற்ற திருத்தலம்" என்றே உறுதியாய் எண்ண இடமிருக்கிறது.

இஃதன்றி, இக்கொங்கு நாட்டில் தேவார வைப்புத்தலங்கள் சில உள்ளன. அவை (1) குரக்குத்தளி, (2) குடக்கோட்டூர், (3) சேவூர், (மாட்டூர்) (4) அறைப்பள்ளி (5) ஏமூர், (6) தோழூர், (7) பூந்துறை (8) திருக்கரபுரம், (9) தகடூர், (10) மூலனூர், (11) திருக்களந்தை, ஆதித்தேச்சுரம் என்பன.

## உற்சவங்களும்—நிகழும் காலங்களும்.

பேரூர் என்னும் இப்பிறவாநெறித்தலத்தில் கோயில்கொண்டருளும் பட்டிப் பெருமான் பச்சைநாயகியாருக்குப்பிர்ம்மோற்சவம், மாதோற்சவம், பக்ஷோற்சவங்களும், கனகசபையில் ஆனந்தநிருத்தஞ்செய்யும் ஸ்ரீநடராஜருக்கு விசேட அபிஷேகங்களும், சமயா

சார்யர்களுடையவும், நாயன்மார்களுடையவும், திருநக்ஷத்திரக் கொண்டாட்டங்களும், இன்னின்ன காலங்களில் நடைபெறுகின்றன வென்பதைச் சிவநேயர்கள், விவரமாக அறியும் பொருட்டு இதன் கீழ் விளக்குகின்றோம். அவை வருமாறு,—

(1) சித்திரை மாதம்:— ஸ்ரீ அரசம்பலவாணருக்குப் பிரம்மோற்சவம்.
திருவோணநக்ஷத்திரத்தில் ஸ்ரீ நடராஜருக்கு அபிஷேகம.
சதய நக்ஷத்திரத்தில் ஸ்ரீ திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜை.

(2) வைகாசி மாதம்:— வசந்த உற்சவம்.
மூல நக்ஷத்திரத்தில் ஸ்ரீ திருஞானசம்பந்தர் குருபூஜை.
பூச நக்ஷத்திரத்தில் ஸ்ரீ சேக்கிழார் குருபூஜை.

(3) ஆனி மாதம்:— நாற்று நடவு உற்சவம்.
மகா நக்ஷத்திரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசகர் குரு பூஜை.
உத்திரத்தில் ஸ்ரீ நடராஜருக்கு அபிஷேகம்.

(4) ஆடி மாதம்:— பச்சைநாயகியாருக்குத் "திருவூசல்" உற்சவம். இதனை 'ஆடிப்பூர உற்சவம்' என்றும் கூறுவர்.
சுவாதி நக்ஷத்திரத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூஜை.
ஷை ஷை ஸ்ரீ சோமாசிமாறநாயனார் குருபூஜை.
சித்திரை ஷை ஸ்ரீ பெருமிழலைக் குறும்ப நாயனார் குருபூஜை.

(5) ஆவணி மாதம்:— பிட்டுத் திருவிழா.
சுக்கிலபக்ஷ சதுர்த்தசியில் ஸ்ரீ நடராஜருக்கு அபிஷேகம்.

(6) புரட்டாசி மாதம்:— நவராத்திரி உற்சவம்.
சுக்லபக்ஷ சதுர்த்தசியில் ஸ்ரீ நடராஜருக்கு அபிஷேகம்.

(7) ஐப்பசி மாதம்:—தீபாவளி அபிஷேகம் கந்தஷட்டி உற்சவம்.
பௌர்ணமியில்-அன்னாபிஷேகம்.

(8) கார்த்திகை மாதம்:—தீபோற்சவம்.

(9) மார்கழி மாதம்:—திருவாதிரை ஸ்ரீ நடராஜர் அபிஷேகம்; நடராஜதரிசனம் பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் கூடும் பெருந்திருவிழா.

(10) தை மாதம்:—தைப்பூச உற்சவம். சுப்பிரமணியக்கடவுளின் திருத்தேர் பவனி.

மிருகசிரிட நக்ஷத்திரத்தில் ஸ்ரீ கண்ணப்ப நாயனார் குருபூஜை.

(11) மாசி மாதம:—சிவன்ராத்திரி உற்சவம்.
சுக்கிலபக்ஷ சதுர்த்தசி ஸ்ரீநடராஜருக்கு அபிஷேகம்.
மகா நக்ஷத்திரத்தில். ஸ்ரீ சாந்தலிங்கசுவாமிகள் குருபூஜை.

(12) பங்குனி மாதம்:—பிரம்மோற்சவம், பெருந்திருவிழா. பல்லாயிரம் அன்பர்கள் ஒன்றுகூடிப்பெருமாளின் திருச்சேவையைத்தரிசிக்கும் நல்லுற்சவம்.

இங்குள்ள ஸ்ரீநடராஜப்பெருமானுக்கு ஆண்டுஒன்றுக்கு ஆறு அபிஷேகம், விசேஷமாக நடைபெறுவதுபற்றி வெண்பாவொன்று அறிஞர் ஒருவரால் பாடப்பெற்றுள்ளது.

அவ்வெண்பாவை அன்பர்கள் அவதானம் செய்து கொள்ளின், மாதமும், நக்ஷத்திரமும் கவனத்திற்கு எளிதாய் வரும். அதுபற்றியே அவ்வெண்பா இதன் கீழ்க்குறிக்கப்படுகிறது.

சித்திரையி லோணமுதற் சீரானி யுத்திரமாம்
சத்ததநு வாகிரையும் சார்வாகும்—பத்திவளர்
மாசியரி கன்னிமருவு சதுர்த்சமன்
நீசாபி ஷேகத்தின மாம்.

## திருமடங்களும்—குறிப்புக்களும்.

இத்தலத்து ஆலயத்தின் தென்புறத்திலும், வடபுறத்திலும், கீழ்புறத்திலுமாகப் பல திருமடங்களிருக்கின்றன. அவைகளில் பெரும்பான்மை, பல ஜாதியர்கள் விசேஷ தினங்களை முன்னிட்டுத் தங்கும் விடுதிகள். 'தருமபுரம்' 'திருவாவடுதுறை' ஆதீனங்களுக்கு இரண்டு திருமடங்கள் இருக்கின்றன. அவைகளில் வடக்குத்தெருவிலுள்ள திருவவாடுதுறை மடத்தில் தொண்டைமண்டலவேளாளமரபினர்கள் விசேஷ நாட்களில் அம்மடத்தைத் தங்குமிடமாக உபயோகித்துவருகின்றனர். ஆண்டுக்கு ஒருநாள் ஆருத்ராதர்சன ஊர்வலத்தில் ஸ்ரீ நடராஜப் பெருமான், அம்மடத்திற்கு எதிரில் மண்டபக் கட்டளை கொண்டருளுகின்றனர். 'வீரசிங்காதனமடம்' ஒன்று வீரசைவர்களுக்குத் திருவாவடுதுறை மடத்துக்கு எதிரிலே யுள்ளது. அம்மடத்தில் வீரபத்திரசுவாமி எழுந்தருளியிருக்கின்றனர். மேலேகாட்டிய திருமடங்களனைத்தினும் தற்போது விசேடமாகவுள்ளது சாந்தலிங்கசுவாமிகள் திருமடாலயமே. இம்மடத்தில் நித்தியபூஜையும், விசேடபூஜையும், மகேசுர பூஜையும் கிரமமாயும், சிறப்பாயும் நடைபெற்று வருகின்றன. இங்கு விதேகமுக்தியடைந்த சாந்தலிங்க சுவாமிகள், திருவாவடுதுறையாதீனத்து நமசிவாயதேசிகரின் மாணுக்கரான சிவப்பிரகாசசுவாமிகளின் மாணுக்கராவர். இச்சுவாமிகள் இயற்றிய கோலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கியதீபம், அவிரோத உந்தியார் என்னும் நான்கு நூல்களும் மிக விசேஷமுடையன. சாமான்யநிலையிலிருந்த இத்திருமடத்தை தற்போதுள்ள உச்சநிலைக்குக் கொண்டு வந்தவர் ஸ்ரீ மாணிக்கசுந்தரசுவாமி என்பவர். இவர் நன்முயற்சியால், சாந்தலிங்கசுவாமிகள் திருமடத்தின் ஆதரவில், சென்ற ராக்ஷஸவருஷம் தைமாதம் 4-ம் தேதி சோமவாரம் பிரதோஷ தினத்தை ஆரம்பநாளாகக் கொண்டு "சத்வித்யா சன்மார்க்கசங்கம்" என்னும் பெயரில் ஓர் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டுச்சென்ற பன்னீராண்டுகளாக அச்சங்கம் வளர்பிறையென்ன வளர்ந்தோங்கி வருகின்றது. இச்சங்கத்திற்குத் தற்போது 5000 ரூபாய் செலவில் புதிய

அழகிய கட்டிடமொன்று கட்டப்பட்டு இவ்வாண்டில், அக்கட்டிடத்தில் 13ஆம் ஆண்டு சங்கவிழா நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுளது.

மேலே காட்டிய மடங்களிருக்கும் இடமும், பெயர்களும் அடியில்வருமாறு:—

மேற்குமாடவீதி:—1. ஞானசிவாசார்யர் மடம், 2. இடையர்மடம் 3. பாலக்காடு இராஜாசத்திரம்.

கிழக்குமாடவீதி—தென்புறம்:—1. வண்ணார்மடம், 2. உப்பிலியர்மடம், 3. சவளக்காரர்மடம், 4. சக்கிலியர்மடம், 5. கன்னார்மடம், 6. பள்ளர்மடம், 7. குயவர்மடம், 8. கம்பிடிய ஒக்கிலியர்மடம், 9. ராசாபுரம் குமாரசாமிக் கவுண்டர்மடம்.

கிழக்குமாடவீதி—வடபுறம்:—1. அகம்படியர்மடம், 2. நாவிதர்மடம், 3. அரசபள்ளியர்மடம்.

கிழக்கெரு திருக்குளத்திற்குவடபுறம்:—1. தேவாங்கர்மடம், 2. கொங்குவேளாளர்மடம், 3. தர்மபுரமடம், 4. செங்குந்தர்மடம், 5. சாந்தலிங்கசுவாமிகள்மடம்.

காஞ்சிமாநதிக்கும் செல்லும்வழியில்:—1. ஐந்நூற்றுவன்செட்டிகள்மடம், 2. நகரவணிகர்மடம், 3. அவர்களது நந்தவனம்.

வடபுறம் மாடவீதி:—1. வாணியர்மடம், 2. துளுவவேளாளர்மடம், 3. வைசியர்மடம், 4. கைக்கோளர்மடம், 5. சான்றார்மடம், 6. திருவாவடுதுறைமடம், 7. நகரவணிகர் சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள் நந்தவனம்.

இவைகட்கு நேர் எதிரில்:—1. வீரசிங்காதனமடம், 2. வேதபாராயணவிப்பிரர் விடுதிகள், 3. போர்போடசாலை. ஆகமொத்தம் 32 மடங்கள்.

## கல்வெட்டுக்களும், அவற்றின் விளக்கமும்.

இத்தலத்துக்கோயில் கொண்டருளும் ஸ்ரீபட்டிப்பெருமான் ஆலயத்து உட்பிரகார கருப்பக்கிருகச்சுவர்களிலும், மகாமண்டபச்சுவர்களிலும், தெற்கு-வடக்கு-மேற்கு ஆகிய மூன்று புறங்களிலும் 23 கல்வெட்டுக்களும்; "அழகிய சிற்றம்பலம்" என்னும் சிற்றாலயத்திலொன்றும், ஆகமொத்தம் 24 கல்வெட்டுக்களிருக்கின்றன. இவைகளில், கரிகாலசோழன் பெயரில் 6-ம், விக்கிரமசோழன் பெயரில் 6-ம், II-ம இராஜராஜசோழன் பெயரில் 1-ம், வீரராஜேந்திரசோழன் பெயரில் 1-ம், கோனேரின்மை கொண்டான் திரிபுவனசிங்கதேவன் பெயரில் 3-ம், வீரவல்லாளதேவர் பெயரில் 1-ம், வீரபாண்டியதேவர் பெயரில் 1-ம், தண்டீஸ்வரதேவர் பெயரில் 1-ம், வீரசோழதேவர் பெயரில் 1-மாக எண்கள் இருபத்தி நான்கு. இச்சாஸனங்களின் தானவிவரங்கள்—திருநந்தாவிளக்குக்குத்தலமும், திருவமுதுக்கு நெல்லும், நிலமும், பொன்னும், வெள்ளாடும் ஆம். இக்கல்வெட்டுக்கள் அனைத்தையும் வெளியிட்டால் விரியுமென்றஞ்சி, மூன்று கல்வெட்டுக்களைமட்டும் இதன் கீழ்த்தருகின்றோம். அவைகள் அடியில் வருமாறு:—

## I. தென்னிந்தியா கல்வெட்டுப்புத்தகம். 5 வால்யம். 240 நெம்பர் (A. R. No. 5064. of 1893) கல் வெட்டு.

ஸ்வஸ்தி ஸ்ரீ கரிகால சோழதேவர்க்கு யாண்டு 11 ஆவதுஆளுடையார் திருவான் பட்டியுடையார்க்குத்தென்வழிநாட்டு ஏழூர் ஊராளி......சிங்கன் சோழனுன அனுத்தரப் பல்லவராயனேன், ஆளுடையார் திருவான்பட்டியுடையார்க்குச்செங்கழுநீர் சாத்தியருளச் செங்கழுநீர் ஓடையும் கல்லுவித்து, செங்கழுநீர்த்திருப்பள்ளித்தாமம் ஆக்குவானுக்கு நிமந்தப்புறமாகவிட்ட நிலமாவது—பேரூர் பிஞ்ஞகன் வயலில் கணபதிவாய்க்காலுக்கு வடக்கு, நீலிவதிக்கு மேற்கு, இரண்டாங்கண்ணாற்று மூன்றும் சதிரத்துச்செங்கழுநீர்ப் புறமாகவிட்ட நிலம் அரைமாவும், இராஜாதித்தமன்னறையில் திருவான்பட்டிவாய்க்காலுக்கு வடக்கு, விலாடகுலமாணிக்கவதிக்குக்கிழக்கு, முதற்கண்ணாற்று மூன்றும் துண்டத்து நிலம் காணியுங்கொண்டு, செங்கழுநீர்த திருப்பள்ளித்தாமம் சாத்துவதாகவும். இத் தன்மம் சந்திராதித்தர்வரை செல்வதாகவும், இந்நிலத்துக்குத்தலைபுகுந்த நிலமாவது கரைவழிநாட்டு கண்ணுடிப்புத்தூரில் வடகரை நிலம். தோவிசெய் முக்காணியும் விட்டு இத தன்மம் செய்தேன். அனுத்திரப்பல்லவராயனுன அனுத்தி.........

## II. மகாமண்டபத்துத் தென்சுவர் No. 242. (A. R. No. 586. of 1893)

ஸ்வஸ்தி ஸ்ரீ வீரவல்லாள தேவர் பிருதிவிராஜ்யம் பண்ணி அருளா......சம்வச்சரம்......பக்ஷத்து சப்தமியும், ஞாயிற்றுக்கிழமையும் பெற்ற கார்த்திகை நாள் பாண்டிமண்டலத்து......சிந்தாமணிவள நாட்டு ெ.........திருவிக்கிரமன் கண்ணப்பனுன தென்னவதரையனேன் கொங்குமண்டலத்துப் பேரூர்நாட்டுப் பேரூர் உடையார் தி........டைய நாயனுர்க்கு உச்சிச் சந்தியிலே ஒரு சந்திதென்னவதரையன் (1) என்றும் அமுது செய்தருள அ......க்கும் கறியமுது முதலாய பல வெஞ்சனமும் உட்பட நாளொன்றுக்கு நெல்லு துணி பதக்கும் ஆக ஆண்டு ஒன்று...தின் கலத்துக்கும் தென்னவதரையன் திருத்தோப்புக்கும், திருநந்தவனப்புறத்துக்கும், ஆண்டு ஒன்றுக்கு நெ......தைத்துக்கும், இத்தோப்பின் மண்டபத்திலே திருத்தைப்பூசத்துக்கும், திருப்பங்குனித்திருநாள் தி......ளி [வ] எறி அருளி அமுது செய்தருள அமுதுபடி அரிசிக்கும், பல வெஞ்சனத்துக்கும், நெல்லு பதின்கலத்துக்கும்.........ம் வழக்கத்துக்கும் திருவீதிப் பந்தத்திற்கு எண்ணெய்க்கும் நெல்லு எழு கலம் குறுணி நானாழியும் ஆக......... பத்தறுகலனே இரு துணிப் பத......க்கு நாநாழிக்கும் விட்ட நிலமாவது—இந் நாட்டுக் குலசேகரநல்லூர் ஊரவர், நான் விலைகொண்டு உடையேனுய் அநுபவி......... வீரநாராயணமன்னறையில் விதை இருபத்தேழுகலனே இருதுணிக்குப்பெருநான்கு எல்லையாவது— நாற்பாற்கெல்லை......கவருக்கு மேற்கும், தென்பாலெல்லை இவ்வூர் பற்றுக்கு வடக்கும், மேல்பாலெல்லை அத்திக்கவருக்குக் கிழக்கும், .........இலட்சுமி நாராயணப் பெருமாள் திருவிடையாட்டத்திற்குத் தெற்கும், ஆக இசைந்த பெருநான்கெல்லைக்கு உட்பட்ட நிலத்தில் பெ...... விதை பதின் அறுகலத்தினுல் நிலம் பன்னிரண்டு மா. இந்நிலம் பன்னிரண்டு மாவும், தென்னவதரையன் சந்திக்கும், தென்ன... ...ம திருத்தைப்பூசத்துக்கும் திருப் பங்குனித் திருநாள் தீர்த்தத்திற்கும், அமுதுபடிப்

புறமும், திருநந்தவனப் புறமுமாக விட்டேன். செழுவனூர் உ......ன் இந்நிலத்துக்கு மாத்தால் இருபத்திருகலநெல்லாக வந்த நெல்லுக்குக் குலசேகரநல்லூர் ஊரும், நகரத்தாரும் குடி நீங்காதே.........பிறவாநெறிக் காணியிலே அளப்பாராகவும். இப்படிக்கு... .........அமுது.........துக்கு எழு மாஹேசுரர்க்குப் பேர் ஒன்......ம். அமுதுசெய்யக் கறியமுதும் திருமுன் ஒடுக்குகை இடுவதாகவும், இப்படிக்குச் சந்திராதித்தர் வரை செல்லச் செம்பிலும், சிலையிலும் வெட்டிக்கொள்ள........செழுவனூர் உடையான் திருவிக்கிரமகண்ணப்பனான தென்னவதரையனேன் இப்படிக்கு.

இவை தென்னதரையன் எழுத்து. இது.........

(III. மகாமண்டபத்துத் தேன்சுவர் முதல்வரி No. 238. (A. R. No. 56 of 1893)

ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவர்த்தி கோனேரிமேல் கொண்டான் தென்கொங்கில் கண்மாளர்க்குத்தங்களுக்குப்பதினைந்தாவது ஆடிமாதம் முதல், நன்மை தின்மைக்கு இரட்டைச்சங்கும் ஊதிப்பேரிகை யுள்ளிட்டன கொட்டிவித்துக்கொள்ளவும், தாங்கள் புறப்படவேண்டும் இடங்களுக்கு பாதரட்சை கோத்துக்கொள்ளவும், தங்கள் வீடுகளுக்குச் சாந்திட்டுக்கொள்ளவும் சொன்னோம். இப்படிக்கு நம்மோலை பிடிபாடாகக்கொண்டு சந்திராதித்தர் வரை செல்வதாகத்தங்களுக்குவேண்டும் இடங்களிலே கல்லிலும், செம்பிலும் வெட்டிக்கொள்க. இவை விழுப்பதரையன் கையெழுத்து. யாண்டு 15-ள் 129. இவை காளிங்கராயன் கையெழுத்து.

ஊரும், அமைப்பும்.

இவ்வூர்—கிழக்குப்பக்கம் கடைத்தெருவையும், சில ஜாதியார்களின் திருமடங்களையும், சில வீடுகளையும்; வடக்குப்பக்கம் காஞ்சிமாநதியையும், சில சிற்றாலயங்களையும் சில திருமடங்களையும், ஆலயகுருக்கள் வீடுகளையும் ; ஊர் நடுவில், ஸ்ரீ பட்டிப்பெருமான் ஆலயத்தையும், ஆலயத்தைச்சுற்றி நான்கு திருவீதிகளையும்; தெற்குப்பக்கம் சில ஜாதியினர் குடியிருப்பையும், சிறுவர் சிறுமியர் கல்விகற்கும் போர்டுபாடசாலையையும், தபாலாபீசையும்; மேற்கில் ஏரியையும் எல்லைகளாகக்கொண்டு, நன்றாக அமைந்த ஓர் சிற்றூர், பெயரில் பேரூருமாம். இதன் ஜனத்தொகை, சுமார் 500 அல்லது 600 இருக்கலாம். வைதிகர்களுக்கு வாஸயோக்கியமான நல்லிடம். சுகாதாரவஸதியும் உண்டு. குளிர்ந்த காற்றும், நெருங்கி வளர்ந்த தென்னந்தோப்புகளும், நஞ்சை நிலங்களும் நிறைந்த மனோகரமான வாஸஸ்தலம்.

நூல்களும், இயற்றினோரும்.

| | | |
|---|---|---|
| 1. | பேரூர்ப் புராணம் | கச்சியப்பமுனிவர். |
| 2. | பட்டிப் புராணம் | பெயர் தெரியவில்லை. |
| 3. | சிதைபறுத்தான் வண்ணம் | தஞ்சை இராமசாமிக் கவிராயர். |
| 4. | கோவை | } கோயமுத்தூர் வித்வான் கந்தசாமி முதலியார். |
| 5. | மும்மணிக் கோவை | } |
| 6. | மாதவல்லி அம்மன் மாலை | } |

| | | |
|---|---|---|
| 7. | பச்சைநாயகியம்மையார் ஆசிரிய விருத்தம் | கோயம்புத்தூர் வித்வான் கந்தசாமி முதலியார். |
| 8. | ஷை ஊசல் | |
| 9. | திருப்பேரூர்க் கிள்ளைவிடு தூது | |
| 10. | மாகதமஞ்சரி | சிதம்பரத்தாண்டவராயமுதலியார். |
| 11. | கண்ணாடிவிடு தூது | வாசுதேவமுதலியார். |
| 12. | விளக்கு விடு தூது | |
| 13. | பச்சைநாயகியம்மன் பந்தடி | |
| 14. | பதிற்றுப்பத்தந்தாதி | சபாபதிபிள்ளை. |
| 15. | திருப்பேரூர் உலா | வ. மு. அருணாசலக்கவிராயர். |
| 16. | நான்மணிமாலை | நடராஜபிள்ளை. சி. கே. சுப்பிரமணியமுதலியார். |
| 17. | பட்டிவிநாயகர் மாலை | போ. க. ஆறுமுகம்பிள்ளை. |
| 18. | பட்டீச்சுரப்பதிகம் | கு. ஞானசித்த சுவாமிகள். |
| 19. | பேரூர்ப்பிள்ளைத்தமிழ் | பெயர் தெரியவில்லை. |

## திருப்பணிகளும், செய்வித்தோர்களும்.

சிவப்பெருஞ்செல்வர் தேவகோட்டை பெ. ரி. சோ. திவான்பகதூர்
P. சோமசுந்தரஞ்செட்டியார் அவர்கள் செய்த திருப்பணிகள்.

1 ஆலயமுன்வாயில் பெரியகோபுரத்திற்கும், பட்டீசுவரர் பச்சைநாயகியார் கர்ப்பக்கிரக விமானங்களுக்கும், புதிதாகச் சுண்ணச்சாந்துகளால் மெழுகி வர்ணந் தீட்டுவித்தது.

2 துவஜஸ்தம்பம் அணிசெட்டிக்கால்மண்டபம் புதுப்பித்தது.

3 சுவாமி, அம்மன் ஆலயங்களுக்குக் கருங்கல்லால் புதிதாக நீராழிமண்டபம் கட்டுவித்தது.

4 சுவாமி, அம்மன் கோயில்களுக்குக் கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம்வரை தரைமுழுவதும் கருங்கல் தளவரிசை போட்டுவித்தது.

5 சுவாமி, அம்மன், நடராஜர், நந்திகேசுவரர், ஆகிய கோயில்களின் கோபுரஸ் தூபிகளுக்குத் தங்கமுலாம்பூசுவித்தது.

6 பட்டீச்சுரர்கோயிலின் உட்பிராகாரத்தில் முன்பாக்கியாயிருந்த மண்டபத்தைப் பூர்த்திசெய்வித்தது.

7 சமயாசார்யர்கள் நால்வர், சிவபெருமான், கணபதி, சுப்பிரமணியதேவர் சித்திரங்களுக்குக் கலர்கண்ணாடி வளைவுபோட்டுவித்தது.

8 நந்திதேவருக்குப் புதிதாக அழகிய மண்டபம் கட்டுவித்தது.

9 திருமடப்பள்ளி கட்டுவித்தது.

10 வாகனமண்டபம் கட்டுவித்தது.

11 யாகசாலை கட்டுவித்தது.

12 பச்சைநாயகியார் திருக்கோயிலுக்குப் புதிய திருவாயிலும், அஷ்டலட்சுமிமண்டபமும் எடுப்பித்தது.

13 சுற்றுப்பிராகாரங்களின் மதில்களின்மீதும், திருக்குளத்தின் மதில்களின்மீதும், புதிதாக நந்திஉருவங்கள் செய்வித்தது.

14 வேதப்பிராமணர் விடுதிகள் கட்டுவித்தது.

15 பாடசாலை கட்டுவித்தது.

16 யானைகட்டுந்தறி கட்டுவித்தது.

17 திருநந்தவனம் நிர்மாணம்செய்வித்தது.

18 கனகசபையின்கீழ் தரைக்குத் கருங்கல் தளவரிசைகளும், வெளிமண்டப முன்வரிசைக்கு கருங்கல் தளவரிசைகளும், இரும்புக்கிராதிகளும், நடராஜர் நிலயத்தின் சந்தனமரச்சித்திரக்கொடிகளுக்குக் கிலிட் பூசியதும்.

19 கோபுரவாயில் முன் மண்டபங்களின் மேற்றளங்களிலும், பக்கவாட்டுக்களிலும் பேரூர்ப்புராணத்திற்கண்ட வரலாற்றுப்படி அழகிய சித்திரங்கள் தீட்டுவித்தது. கனகசபையின் மேற்றள முன்றுவரிசைகளுக்குத் தாமரைத்தளங்களைப்பல வர்ணங்களில் எழுதுவித்தது.

20 மரகதவல்லியார் கோயிலின் மேற்றளவரிசைகளுக்கு வர்ணந்தீட்டுவித்தது.

21 வெள்ளி மூஷிகவாகனம் செய்வித்தது,

22 ஆலயமுழுதும் மின்சாரவிளக்குகள் போட்டுவித்தது.

மற்றைய திருப்பணிகள் செய்தோர்கள்.

1 கல்யாணமண்டபம்—தாளியூர், தீனம்பாளையம், மத்திபாளையம் ஆகிய மூன்று கிராமத்தின் கவுண்டர் வகையறாத்தனிகர்கள்.

2 நால்வர் மண்டபம்—அன்பர் சுப்பையாபிள்ளையவர்கள் வகையறா.

3 நடராஜர் பட்டிசுற்று அரசமரத்து மேடைக்குக்கற்கட்டு—கோயமுத்தூர் ஸ்ரீமான் சவுடே கவுடரவர்கள்.

4 பிறவாப்புளி விருக்ஷத்திற்குக்கற்கட்டுமேடை—ஷை.

5 தென்கயிலாயத்து ஆலய ஜீர்ணோத்தாரணம்—ராசிபுரம் ஸ்ரீமான் ரு. செம்பருத்திக்கவுண்டர் அவர்கள்.

6 தங்கப்பெரிய சப்பிரம்—பள்ளபாளையம் ஸ்ரீமான் முத்துச்சாமிபிள்ளை அவர்கள்.

7 வெள்ளிப்பெரிய சப்பிரம்—சென்னிமலை ஸ்ரீமான் கிருஷ்ணசெட்டியாரவர்கள்.

8 வெள்ளி மயில் வாகனம்—பொள்ளாச்சி ஸ்ரீமான் இரத்தின சபாபதிக்கவுண்டர் அவர்கள்,

9 நடராஜர், சிவகாமியம்மையார், தண்டாயுதபாணி ஆகிய தேவர்களுக்குத் தங்கக் குவளை கட்டிய கௌரி சங்காம், சொர்ணவில்வதளமாலை, சொர்ண பிரபாவளி முதலியன—ஸ்ரீமான் கருப்பண்ணபிள்ளை அவர்கள்.

10 யானை உபயம்—எட்டிமடைப்புதூர் ஸ்ரீமான் அ. சுப்பைய கவுண்டாவர்கள்.

குறிப்பு:—இப்புத்தகத்தை இயற்றுவதற்கு நமக்கு வேண்டிய விஷயங்களைச் சேகரஞ்செய்தும், அச்சிடும் இடத்திற்கு நேரிற்சென்று புரூப் திருத்தியும் உதவிய கோயமுத்தூர் ஸ்ரீமான் சி. கு. நாராயணசாமி முதலியாரவர்களுக்கு நமது மனமார்ந்த நன்றி என்றும் உரியதாகுக.





# தென் இந்தியா க்ஷேத்திரங்கள்.

## முதற்புத்தகம்.

| | | | ரூ அ |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீரங்கம் | ... | 0 10 |
| 2. | சிதம்பரம் | ... | 1 0 |
| 3. | திருவானைக்காவல், திருச்சினப்பள்ளி, உய்யக்கொண்டான் திருமலை | .... | 0 10 |
| 4. | கரூர், நெரூர், கங்கைகொண்டசோழபுரம், அன்பில் | ... | 0 10 |
| 5 & 6. | மதுரை | ... | 1 8 |
| 7. | ராமேசுவரம், உத்தரகோசமங்கை, திருப்புல்லாணி | ... | 0 10 |
| 8. | திருக்கழுக்குன்றம், மஹாபலிபுரம் | ... | 0 12 |
| 9. | கீழத்திருப்பதி | ... | 1 0 |
| 10. | மேலத்திருப்பதி | | (சீக்கிரம் வெளிவரும்) |




---

ஆஸ்திக [illegible] அடி அத்வைத ஸபையிலிருந்து சிருங்கேரி மடத்தாரால் வெளியிடப்ப[illegible]ஞ்சிகை. பிரதி ஸஞ்சிகையிலும் ஸம்ஸ்கிருதம், தமிழ் இரண்டு பாஷைகளிலும் வியாஸங்கள் வெளிவரும்.

வருஷ சந்தா ரூ. 6 6 0
தனி ஸஞ்சிகை ரூ. 0 9 0



மானேஜர்,
ஸ்ரீ வாணிவிலாஸ புத்தகசாலை,
ஸ்ரீரங்கம்.